# (1) நமது கட்டிடங்கள்

நம்முடைய கட்டிடக்கலை தமிழகத்தில் இன்று எவ்வாறு அடையாளமிழந்து போய்விட்டிருக்கிறது என்று பயணக்கட்டுரையில் குறிப்பிட்டிருந்தேன். அதை ஒட்டி இணையக்குழுமத்தில் நிகழ்ந்த விவாதங்களுக்கு என் எதிர்வினை இது

உலகில் எங்கும் எப்போதும் கட்டிடக்கலை 'தூய்மை'யாக இருக்காது. ஒரு தலைமுறைக்குள் அமைப்பில் மாற்றம் வராமலும் இருக்காது. கட்டிடம் பண்பாட்டுச்சின்னமாக இருப்பதனால் ஒரு நாட்டில் நுழையும் எல்லாப் பண்பாடுகளும் கட்டிட அமைப்பைப் பாதிக்கின்றன. நடைமுறைத் தேவைகள் கட்டிட அமைப்பில் மாற்றங்களைக் கொண்டு வருகின்றன. ஆகவேதான் உலகக் கட்டிடக்கலைகள் தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கின்றன.

நம்முடைய கோயில்கள்கூட நம்முடைய சொந்தக் கட்டிடக்கலையைக் காட்டுவன. ஆனால் அவையும் நம்மிடம் இருந்து மட்டும் சுயம்புவாக உருவானவை அல்ல. அவற்றில் புராதன பௌத்த விகாரங்களின் கட்டிடக்கலையின் செல்வாக்கு மிக அதிகம். நம் கட்டிடக்கலை உருவாவதை ஒரு நடைமுறை விளக்கம் போலவே அஜந்தா-எல்லோராவில் காணலாம். ஆரம்பகால குகைகள் சாலமோன் குகைகள் போல எளியவை. மெல்லமெல்லத் தூண்களும் சிற்பங்களும் உருவாகிவந்தன. கடைசியில் எல்லோராவில் நம் கோயில் வடிவமே உருவாகி வந்துள்ளது. அந்த வளர்ச்சிப்போக்கில் காந்தார-எகிப்திய குடைவரைக்கோயில்களின் பாதிப்பு வெளிப்படையாகவே தெரிகிறது. சுவரோடு ஒட்டிய பெரிய தூண்கள், புடைப்புச்சிற்பங்கள் உதாரணம்.



எகிப்திய கட்டிடக்கலை முகப்பு



அஜந்தா -முகப்பு




தூண்கள்- எகிப்து



அஜந்தா தூண்கள்

ஆனால் எந்த அன்னிய கலைப்பாணியும் ‘அப்படியே’ இங்கே கொண்டு வரப்படவில்லை. இங்குள்ள மரபும், வரும் மரபும் படைப்பூக்கத்துடனும்

நடைமுறைஞானத்துடனும் கலக்கப்பட்டுத்தான் புதிய கலைவடிவம் உருவாக்கப்படுகிறது. நம் கோயில்களில் மத்திய ஆசிய குகைக்கட்டிட அமைப்புகளில் இருந்து உருவாகி வந்த பௌத்தக் கல்கட்டிடங்களின் அழகியல் எந்த அளவுக்கு உள்ளதோ அதை விடப் பலமடங்கு அதிகமாக இங்கே ஏற்கனவே இருந்த மரக்கட்டிடங்களின் அழகியல் உள்ளது. மரக்கட்டிடங்கள் கல்கட்டிடங்களாக ஆனபோது கல்லின் அழகையும் சாத்தியங்களையும் காட்டும் புதிய வழிகளைக் கலந்துகொண்டார்கள் அவ்வளவுதான். அவ்வாறுதான் நாம் நம்முடையதெனக் கொண்டாடும் தென்னகக் கோயில் கட்டிடக்கலை உருவாகியது.

கோயில்களைச் சென்று பார்த்தாலே இது தெரியும். கல்லில் மரத்தைக் கொண்டுவர முயன்றிருக்கிறார்கள். சீரான உத்தர நுனிகள், கூரை விளிம்புகள், பட்டைத்தூண்கள் எனத் தமிழகக் கற்கோயில்களின் அழகியல்,அவற்றின் மரத்தாலான முன்னோடிகளில் இருந்து உருவாகி வந்தது – அந்த மரக்கட்டிடங்கள் ஏதும் இப்போது இல்லை, அவ்ற்றின் அழகு மட்டும் கல்லில் படிந்து இன்று கிடைக்கிறது.



கல்லில் எழுந்த மரக்கட்டிடம், ஹொய்ச்சால மரபு

பின்னர் முகலாயக் கட்டிடக்கலை வந்தது. அது செங்கல்லின் கலை. வளைவுகளை அதிகம் நம்பியது. திருவாரூர் போன்ற கோயில்களில் நாம் முகலாயக் கட்டிடக்கலையின் பாதிப்பைக் காணலாம். முகலாயர்களின்

வளைவு அழகியலை இக்கோயில்கள் தாமரை வடிவங்களாக ஆக்கிக்கொண்டிருக்கின்றன. இங்குள்ள அழகியலொருமைக்குள் அந்தப் புதிய கூறு திறம்படக் கலக்கப்பட்டுள்ளது.

அதன்பின்னர் வந்தது,பிரிட்டிஷ் கட்டிட அமைப்பின் செல்வாக்கு. செங்கல்லையும் சுதையையும் பயன்படுத்தி உருவாக்கப்பட்ட உருண்ட பெரிய தூண்கள், உயர்ந்த சாளரங்கள் போன்றவை அதன் முக அடையாளம். ஆனால் அவையும் பெரும்பாலும் இங்கே இருந்த பழைய மரக்கட்டிடங்களின் அழகியலை உள்வாங்கித்தான் அமைக்கப்பட்டன.அவை அன்றாடப்புழக்கத்துக்கான இடங்களாதலால் கோயில்களின் அழகியலை எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால் நம் பாரம்பரிய வீடுகளின் பல அம்சங்கள் அவற்றில் உண்டு. பெரிய சுற்று வராண்டாக்கள். வாசல்- சன்னல்களுக்கு மேலே அழகிய வளைவுகள். அங்கணங்கள். அவற்றை பிரிட்டிஷ் கட்டிடக்கலை என்று சொல்வதில்லை. இந்தோ-பிரிட்டிஷ் கட்டிடக்கலை என்றுதான் சொல்கிறார்கள்.

மேலும் அவை ஆதிக்கத்தால் உருவாக்கப்பட்டவை. அவற்றில் அன்னிய அம்சம் மேலோங்கி இருப்பதும் இயல்பே. தங்கள் தனியடையாளத்தை இந்தியாமேல் நிறுத்த வேண்டும் என்ற நோக்குடன் அமைக்கப்பட்டவை. அவை நம் வரலாறு. ஆகவே அவை நம் பண்பாட்டின் அம்சங்களே. நாம் அவற்றை நிராகரிக்கமுடியாது.

அதேபோலக்கேரளக்கட்டிடக்கலை.நெடுங்காலமாகவே கேரளத்திற்கும் சீனாவுக்கும் தொடர்புண்டு. சீன மரக்கலை கேரளத்தில் செல்வாக்கு செலுத்தியிருக்கிறது. இன்றும் அகலமான உளிக்குச் சீன உளி என்று சொல்கிறார்கள். சீனாவின் கூரை அமைப்பு, கேரளத்தைப் பாதித்தது. அத்துடன் அது கேரள மழைச்சூழலுக்கு உதவியாகவும் இருந்தது.

கேரளத்தில் ஏற்கனவே தென்னை ஓலைக்கூரை இருந்தது. அதற்கு ஒரு குறிப்பிட்ட அளவுக்கு சரிவு வேண்டும். ஆகவே பெரிய வீடுகள் பல அடுக்குகளாகக் கூரைகளை அமைத்திருந்தன. அந்த அழகியலைச் சீனபாணி கூரைக்குக் கொண்டு வந்து அடுக்கடுக்கான கூரைகளையே கோபுரங்களாக ஆக்கும் முறை உருவானது. ஓலைக்கூரைகள் கூம்புக்கோபுர வடிவில் இருந்தன. கூம்பும் சீனபாணி விளிம்பும் கலந்து மெல்ல கேரளத்திற்கே உரிய தனித்துவமான கட்டிடக்கலை உருவாகி வந்தது.

பழைய கோயில்களில் ஒரே ஒரு சிகரத்தால் ஆன கோபுரம் இருந்திருக்கிறது. பின்பு அது பல சிறிய சிறிய சிகரங்களின் தொகுப்பாக ஒரு பெரிய சிகரத்தை அமைக்கும் முறையாக வளர்ந்தது. ஹம்பியில் ஒரே இடத்தில் எல்லா வகை கோபுரங்களையும் காணலாம். அதேபோல கஜுராகோவில் கோபுரவடிவங்கள் படிப்படியாகப் பரிணாமம் பெறுவதைக் காணலாம்.




சீன பகோடா



வடக்குநாதர் ஆலயம் திரிச்சூர்

இந்தியக் கட்டிடக்கலை என்பதே கொண்டும் கொடுத்தும் வளர்ந்தது. எல்லாப் பாணிகளும் எல்லா இடங்களுக்கும் சென்றன. ஆனால் செல்லும் இடத்தில் ஏற்கனவே இருந்த அழகியலை ஏற்றுப் புதிய வடிவங்களை உருவாக்கிக்கொண்டன. கஜுராகோ கோயிலின் வடிவம்தான் தஞ்சைப் பெரிய கோயிலில் தெரிகிறது. ஆனால் இங்கே வரும்போது ஏற்கனவே இங்கே இருந்த கோபுரங்களின் அழகியலை உள்வாங்கி அது புதிய ஒன்றாக ஆகியது.

இதையே நாம் எதிர்பார்க்கிறோம். புதுமை வரக்கூடாதென்றல்ல. வரும் புதுமை இங்கே இருக்கும் பழமையின் சிறந்த அழகியல் அம்சங்களை, நடைமுறை வசதிகளை உள்வாங்கிக்கொண்டு நம்முடைய சொந்த கட்டிடக்கலை ஒன்றை உருவாக்கிக்கொண்டிருக்க வேண்டும் என்று. அதன் மூலமே நம் அழகியல்வளர்கிறது.



காந்தரிய மகாதேவர் ஆலயம் கஜுராகோ



தஞ்சை பெரியகோயில்

அதற்கு ஆழமான படைப்புத்திறன் தேவை. புதிய அழகியலின் சாரத்தை உணர்ந்து தேவையை மட்டும் எடுத்துக்கொள்ள, பழைய அழகியலில் இருந்து ஆதாரமான விஷயங்களைத் தக்கவைத்துக்கொள்ள, அவற்றின் கலவையாக முற்றிலும் புதிய ஒன்றை உருவாக்க விரிவான ஞானமும் துடிப்பான கற்பனையும் தேவை.

ஆனால் இங்கே நிகழ்வது வெறும் பிரதியெடுப்பு. அதற்குப் படைப்பூக்கமே தேவை இல்லை. கொத்தனாரே போதும். இங்கே கட்டிட வரைபடவியலில் படைப்புத்திறன் கொண்ட எவருமே இல்லை என்றே நினைக்கிறேன். இங்குள்ள எல்லாக் கட்டிடங்களும் வெறும் நகல்கள். சென்னையில் என்னைக் கொஞ்சமேனும் கவர்ந்த புதிய கட்டிடம் ஒன்றுகூட இல்லை.

காரணம் நம் கட்டிட வரைவாளர்களுக்கு மரபு கொஞ்சம்கூடத் தெரியாது. இந்திய மரபையே மதிக்காத உயர்நடுத்தர குடும்பத்தின் பிள்ளைகள் அவர்கள். பெரும்பாலும் பிளஸ்டூவின் மனப்பாட மதிப்பெண் அல்லாமல் எந்தத் தகுதியும் இல்லாதவர்கள். கல்லூரிகளில் அவர்களுக்குச்சொல்லிக்கொடுக்கப்படுவதெல்லாம் மேலைநாட்டுக் கட்டிடக்கலை. ஆகவே புதுமை என்ற பேரில் ஏற்கனவே அவர்கள் கண்ட சில புதிய கட்டிடங்களை இஷ்டத்துக்குக் கலந்து எதையாவது கட்டி வைக்கிறார்கள். கட்டிடங்களை உண்டு கட்டிடக்கலவையாக வாந்தி எடுத்தது போல. சென்னையின் பல நட்சத்திர விடுதிகளை அருவருப்பானவை என்றே சொல்லவேண்டும்.

எவ்வளவோ சொல்லலாம். கான்கிரீட்டில் முடியும் என்பதற்காகவே நீட்டல்களை அமைத்துக் கண்ணில் குத்தும் விதமாக அமைக்கிறார்கள். பின்னணியில் பளீரிடும் வானம் உள்ள ஒரு நாட்டின் கட்டிடங்களுக்கு அவற்றுக்கே உரிய வண்ணமும் வடிவமும் தேவை என்பதையே மறந்துவிடுகிறார்கள். பளீரிடும் நிறங்கள் அபத்தமாக உறுத்துகின்றன.

இங்கே கண்ணாடிகளைப் புறத்தே பயன்படுத்தும் விதம் பற்றி எனக்கு எப்போதுமே மனக்கசப்பு உண்டு. அக்கட்டிடங்களைக் கண்களாலேயே பார்க்கமுடிவதில்லை. கண்ணில் தீயாக அறைகின்றன. கனடாவிலும் அமெரிக்காவிலும் கண்ணாடிக் கட்டிடங்களைப் பார்க்கையில் அப்படித் தோன்றவில்லை. அங்குள்ள மங்கிய வெளிச்சம் கொண்ட சூழலுக்கு, இருண்ட வான் பின்னணிக்கு அவை மிகமிக இதமாக இருந்தன. கண்ணாடிப்பரப்பே அழகிய தடாகநீர்ப்பரப்பு போல் இருந்தது. அவை அந்தச்

சூழலுக்காகக் கண்டுபிடிக்கப்பட்டவை. எந்தக் கற்பனையும் இல்லாமல் அவற்றை அப்படியே இங்கே கொண்டுவருகிறார்கள்.

கட்டிடம் என்பது வேடிக்கை பார்ப்பதற்கான அமைப்பு அல்ல. அது ஒரு குறியீடு. அந்தக்குறியீடு எதைச் சொல்கிறதென்பதே முக்கியம். நம் கோயில்களின் குறியீட்டு ஆழம் மிக விரிவானது. ஒட்டுமொத்தமாக அவை பல்வேறு வழிபாட்டுமுறைகளையும் ஞானவழிகளையும் ஒன்றாக இணைக்கும் தொகுப்புத்தன்மையைக் காட்டுகின்றன. பிரிட்டிஷ் கட்டிடங்கள், அவர்களின் கிரேக்க-ரோம பாரம்பரியத்தை வலியுறுத்த விரும்புகின்றன.

நாம் பொதுக்கட்டிடங்களை அமைக்கும்போது நம்முடைய பண்பாட்டு அடையாளமாகவே அவற்றை அமைக்கவேண்டும். அவை என்ன சொல்கின்றன என்பது முக்கியம். நீண்ட பாரம்பரியம் உள்ள நம் நாட்டின் அழகியலுக்கும் நவீனகாலகட்டத்திற்கும் உள்ள ஒரு உரையாடலாக அவை அமைந்திருக்கவேண்டும். எப்படியோ அவை நம்மைச்சுற்றி உள்ள மலைகளுடனும் மரங்களுடனும் பிற தொன்மையான கட்டிடங்களுடனும் ஒரு இயல்பான அழகியல் ஒருமையைக் கொண்டிருக்கவேண்டும்.

அதற்கு முதலில் நாம் யார் என நாம் அறிந்திருக்கவேண்டும்.

## (2) நம் ஆலயங்களுக்கான ஐந்து நெறிகள்

அன்புள்ள அண்ணா,

நேற்று புதுக்கோட்டை, காரைக்குடி வட்டாரங் களில் உள்ள சிற்பங்கள், கோவில்களை பார்க்க சென்றிருந்தேன். முதலில் வயிரவன் பட்டி பாண்டியர்கள், சோழர்கள், நாயக்க மன்னர்களின் திருப்பணியில் தமிழக அளவில் தனி முத்திரை பதித்த ஆலயத்தில் சமீபத்தில் ஆலய திருப்பணி என்ற பெயரில் ஆயிரமாண்டு கள் பழமையான நுட்பமான சிற்பங்களில் sand blasting செய்து சிற்பங்களில் முகம், நகம், முத்திரை, ஆடை மடிப்புகள், ஆபரண ங்களை சிதைத்திருக்கிறார்கள். அதோடு ஆயிரமாண்டு பழமையான கோபுரங்களில் உள்ள சுதை சிற்பங்களிலும் நவீன வர்ணங்களைப் பூசி அசிங்கப் படுத்தியிருக்கிறார்கள். முன் பகுதியில் உள்ள வினாயகர் ஆலயத்தின் வரவேற்பு யானைகள் படியின் முன்பு அமைக்கப்பட்டிருக்கிறது.

அந்த குவலயங்கள் தமிழகத்தில் உள்ள சிறந்தவைகளில் ஒன்று. அதை மண் போட்டு மூடி, நடப்பதற்கு வசதியாக இருப்பதற்காக பேவர் பிளாக் கல்கள் போட்டு மூடி வைத்திருக்கிறார்கள். யானையின் கண்கள் வரை மண் நிரப்பி இந்த வேலையை செய்திருக்கிறார்கள். உள்ளிருக்கும் நாய்க்கர்களின் குதிரை வீரன், மன்மதன் சிற்பங்களுக்கு மெலமைன் பாலிஷ் ஏற்றி வைத்திருக்கிறார்கள்.

அடுத்து இரணியூரிலும், நேமத்திலும் சோழர்களின் கலை அற்புதத்தின் உச்சமான செப்பு திருமேனிகள் கல் ஆலின் கீழ் அமர்ந்த தென்முக கடவுளின் கீழ் அமர்ந்து பாடம் கேட்கும் சனகாதி முனிவர்களின் சிற்பங்கள் , சோமாஸ்கந்தர், நடனத்திலிருக்கும் திரு ஞான சம்பந்தரின் உற்சவ மூர்த்திகள் பெரும்பாலான ஆலயத்தில் உள்ளது போல சன்னதிகளில் அல்லாமல் கம்பி கிராதிகளில் வழிபாடின்றி அடைத்து வைக்கப்பட்டிருக்கிறது. சோழர்களின் செப்பு திருமேனிகளும், நம் கற் சிற்பங்களும் அடுத்த கணம் உயிர் பெற்று இறங்கி நம்மை ஆட்கொள்ளும் எனும் அளவு தத் ரூபமும் உயிரோட்டமும் கொண்டவைகள் அவற்றை வழி பட்டு இறை அனுபவம் பெறுவதை, ஒரு பக்தரின் அடிப்படை உரிமையை எப்படி தடுப்பது என்று தோன்றினாலும் சிலை திருடர்கள், பன்னாட்டு கலாச்சார திருட்டு அமைப்புகளை நினைத்தால் பயமாக தான் இருக்கிறது.

அடுத்து சென்ற பிள்ளையார்பட்டியிலும் உள்ள ஒரு பொது பிரச்சினை கூட்டத்தை கட்டுபடுத்தவும், பக்தர்கள் வெயிலில் நிற்காமல் இருக்கவும் GI sheet ல் மேல் மறைப்பும், இரும்பு கம்பிகளில் தடுப்பு கம்பிகள் இவை கோவிலின் முன் அமைப்பு அதன் தோற்ற பழமைக்கு சற்றும் சம்பந்தமில்லாமல் இருக்கிறது. பக்தர்களின் வசதி, வழிபாட்டு உரிமையோடு அதன் அழகிற்கும் பழமைக்கும், ஒரு முக்கியத்துவம் வழங்கப்பட வேண்டும்.

இது எல்லாவற்றையும் விட முக்கியமான பிரச்சினை மாணிக்க வாசகரின் ஆவுடையார் கோவிலில் இருக்கிறது. தமிழகத்தின் அடையாளம் மட்டுமல்ல, சைவ ஞானத்தின் மையமும், சிற்பங்கள், நுட்பங்களில் மேன்மையான ஆலயத்தின் முகப்பை மறைத்து ஒரு கான்கிரீட் கட்டிடம் கட்டி கொண்டு இருக்கிறார்கள். ஆலய திருப்பணி ஒப்பந்த ங்கள் செய்யும் போது முக்கியமான ஒரு சேர்ப்பாக ஆவுடையார் கோவில் முகப்பு மாதிரி நீங்கலாக என்று இருக்கும். அப்படி ஒரு கலை சிறப்பு மிக்க முன் முகப்பு மண்டபத்தை மறைத்து மனசாட்சியோ, அறிவோ இல்லாமல் ஒரு கான்க்ரீட் கட்டிடம் கட்ட எப்படி அனுமதி அளித்தார்கள் என்றே தெரியவில்லை.

தமிழகத்தின் சிற்ப மரபு, அழகுணர்ச்சி, நுட்பம் இதெல்லாம் என்ன ஆனது? குருடனோ, முழு மூடனோ கூட இப்படியான காரியத்தை செய்ய மாட்டார்கள். இங்கு மட்டும் ஏன் இப்படி நிகழ்கிறது என்றே தெரியவில்லை. இதோடு தமிழகத்தில் ஆலயத் திருப்பணி என்ற பெயரில் நிகழும் அழிவுப்பணிகள் அன்னிய ஆக்ரமிப்பாளர்கள், நிகழ்த்தியதற்கு எந்த அளவிலும் குறைவில்லாதது. இதற்கு ஏதாவது செய்யுங்கள்.

ராஜமாணிக்கம்

திருப்பூர்

***

அன்புள்ள ராஜமாணிக்கம்,

சென்ற மாதம் காஞ்சிபுரம் சென்றிருந்தேன். அங்கே ஓர் ஆலயத்தின் ஆயிரத்தைநூறு ஆண்டுக்காலம் தொன்மையான சிற்பங்களைச்சுற்றி நாலாந்தர ஓடுகளை ஒட்டி ‘புதுப்பித்திருப்பதைக்’ கண்டேன். பக்தர்களின்

திருப்பணி. அந்த ஓடுகள் கூடிப்போனால் முப்பதாண்டுகள் இருக்கும். அதன்பின்னர் அதை பெயர்த்து வீசி விடவேண்டும். சிமிட்டி பூசப்பட்ட சுவர் அசிங்கமாக இருக்கும். ஆகவே மீண்டும் ஒட்டவேண்டும். அப்படி இருமுறை பெயர்த்து ஒட்டினால் கோயிலே இருக்காது. என்ன சொல்ல? அதைப்பற்றி இங்கே எவருக்கு அக்கறை?

இந்தமாதிரி மாதம்தோறும் கொதித்துக்கொண்டிருக்கிறேன். இதழாளர்களான நண்பர்களிடம் சொல்லி செய்தியாக இதை வரவழைக்க முயல்வேன். ஆனால் தமிழக ஊடகங்கள் எவையிலும் இதுசார்ந்த அக்கறைகொண்ட எவரும் இல்லை. மேலும் இப்படி கோயில்களை 'புதுப்பித்து' சிற்பங்களை அழிப்பதென்பது பொதுமக்களால் பெரிதும் விரும்பிச்செய்யப்படுவது. அவர்களின் நிதியால் நிகழும் சமூகச்செயல்பாடு. அதற்கு எதிராக ஊடகங்கள் செல்ல அஞ்சுகின்றன. அதோடு கும்பாபிஷேக விளம்பரங்கள் அவற்றின் மிகப்பெரிய வருவாய்

பக்தர்களிடம் திரும்பத்திரும்பச் சொல்லிக்கொண்டிருக்கிறேன். ஆனால் தமிழகத்தில் பக்தி என்பது உலகியல்வெறி மட்டுமே. தோஷநிவர்த்திக்காக கோயிலை இடிக்கவேண்டும் என்று யாராவது சோதிடர்கள் சொல்ல ஆரம்பித்தால் ஒரே வருடத்தில் தமிழகத்தின் அத்தனை கோயில்களையும் ஜல்லிக்குவியல்களாக ஆக்கிவிடுவார்கள். இந்தப்பதர்களின் மூடத்தனத்தால், சுயநலத்தால் நம் மூதாதையரின் செல்வங்கள் ஒவ்வொரு நாளும் அழிக்கப்படுகின்றன.

திருப்பணிக்குழுக்களிடம் மணல்வீச்சு பற்றி நேரடியாகவே பேசியிருக்கிறேன். 'சாமிகும்பிடுவதற்காகத்தான் கோயில். பக்தர்களின் வசதிக்காகத்தான் அதன் கட்டிடங்கள். கோயில் இடிந்தால் வேறுகோயில் கட்டிக்கொள்வோம். கோயில் சிற்பங்களைப் பாதுகாக்கவேண்டும் என்றெல்லாம் பேசுபவர்கள் நாத்திகர்கள். அவர்களுக்கு கோயில் ஒரு அருங்காட்சியகம் மட்டும்தான். சிற்பங்களைப்பார்க்கவேண்டுமென்றால் அருங்காட்சியகம் செல்லவேண்டியதுதானே? ஏன் பக்தியில் தலையிடுகிறீர்கள்?" இதுவே பதில். சமீபத்தில்கூட ஒரு திருப்பணிச்செல்வர் இப்படி என்னிடம் கேட்டார்

இங்கு கலையில் இலக்கியத்தில் ஆர்வமுள்ளவர்கள் மிகமிகக்குறைவு. அவர்களும் இங்கே நிகழ்ந்த நீண்டநாள் மூடநாத்திகப்பிரச்சாரத்தின் அடிமைகள். அவர்களுக்குக் கோயில் என்றாலே பழைமை, மூடநம்பிக்கை,

பார்ப்பனியம்தான். தமிழ்த்தேசியம்பேசும் கும்பலுக்குக்கூட கோயில்கள் தமிழர்களின் சொத்து என்னும் எண்ணம் இல்லை. "பீரங்கி வச்சு பிளக்கணும்னு பாவேந்தர் சொன்னார். இப்டி மணல்வீசிப்பிளந்தாலும் நல்லதுதானே?" ஒரு திராவிட இயக்க எழுத்தாளர் கேட்டார்.

மொத்தத்தில் தமிழகம் முழுமையாகவே ஆலயங்களை அழிக்கும் வெறிகொண்டிருக்கிறது. ஒரு சாரார் அதை அழித்து நுகர முயல்கிறார்கள். இன்னொரு சாரார் அதை அழித்து மறைக்க விரும்புகிறார்கள். எஞ்சியிருக்கும் குரல்களால் உண்மையில் ஒன்றுமே செய்யமுடியவில்லை.

மணல்வீச்சுக்கு எதிராக நீதிமன்றத்தடை பெறப்பட்டுள்ளது. நீதிமன்ற ஆணையுடன் சென்று மணல்வீச்சை சட்டபூர்வமாகத் தடுக்கமுடியும். ஆனால் எவர் செய்வது? செய்ய ஆளே இல்லை. இடது வலது, திராவிட, பொதுவுடைமை, தமிழ்த்தேசியம் – எதுவும். ஆகவே நீதிமன்ற ஆணையை மீறியே அனைத்துத் திருப்பணிகளும் செய்யப்படுகின்றன

ஐந்து அடிப்படை விஷயங்கள் நம் மக்களிடையே எடுத்துச்செல்லப்படவேண்டும். அவர்களில் ஆக்கபூர்வமாகச் சிந்திக்கும் பத்து சதவீதம்பேராவது அதை ஏற்றுக்கொள்ளவேண்டும். அது நிகழாமல் என்ன செய்தும் பயனில்லை.

1. ஆலயங்கள் வெறும் வழிபாட்டிடங்கள் அல்ல, அவை நம் மரபின் அடையாளங்களும்கூட. அவை கலைச்செல்வங்கள்.மாபெரும் குறியீடுகள். நம்மால் அவற்றை மீண்டும் உருவாக்கிவிட முடியாது.

2. இந்தியாவிலுள்ள அனைவருக்குமே இறந்தகாலம் பொதுதான். ஆகவே மரபுச்சின்னங்கள் அனைவருக்கும் சொந்தமானவை. அவை இந்து பௌத்த சமண ஆலயங்கள் என்பதனால் இந்துக்கள் பௌத்தர்கள் சமணர்களுக்கு மட்டும் சொந்தமானவை அல்ல. ஆத்திகர்களின் சொத்து அல்ல ஆலயங்கள்

3. ஆலயங்களை புதுப்பிப்பது என்றால் அவை எந்தமுறைப்படி அமைக்கப்பட்டுள்ளனவோ அதே முறைப்படி கட்டுமானங்கள் செய்யப்படவேண்டும். அதே பொருட்களைக்கொண்டு. கல் என்றால் அதே கல்லில். அதே சிற்ப அமைப்பின்படி. அவை சிற்பிகளால்தான் செய்யப்படவேண்டும். சிமிண்ட் முதலிய பொருட்களால் கொத்தனார்களைக்கொண்டு செய்யப்படுவது திருப்பணி அல்ல. ஆலய

இடிப்பு. அதைச்செய்பவர்கள், செய்வதற்கு நிதியுதவி செய்பவர்கள் ஆலயத்தை இடித்த குலப்பழியையே தேடிக்கொள்கிறார்கள்.

4. ஆலயத்தை வழிபாட்டு வசதிக்காக விரிவாக்கம் செய்யக்கூடாது. ஆலயம் ஒரு சிற்பம். அதற்கு ஒரு வடிவ ஒருமை உள்ளது. ஒரு சிற்பத்தில் மேலதிகமாக ஒரு கையை வைத்து ஒட்டுவதுபோன்ற செயல் அதை விரிவாக்கம் செய்வது. ஆலயத்திற்குள் கழிப்பறை கட்டுவது அலுவலக அறைகள் கட்டுவது. நிரந்தரமாகக் கொட்டகைகள் போடுவது போன்றவை ஆலயத்தை அழிப்பது மட்டுமே. ஆலயத்தில் நிகழும் எந்தவகையான விரிவாக்கமும் காலப்போக்கில் அதன் கட்டிடங்களை அழிக்கும்.

5. சிற்பங்களை எவ்வகையிலும் மாற்றியமைக்க நமக்கு உரிமை இல்லை. சிற்பங்கள் அச்சிற்பிகளால் ஆகமமுறைப்படி, கலைமரபுப்படி முழுமையாகச் செதுக்கப்பட்டவை. அவற்றின்மேல் வண்ணம் பூசுவதும், மீண்டும் சுரண்டுவதும், சிமிட்டியால் அவற்றை மாற்றியமைப்பதும், மணல்வீச்சு முறைப்படி மழுங்கடிப்பதும், அழுக்கு ஆடைகளை அவற்றில் நிரந்தரமாகச் சுற்றி வைப்பதும், எண்ணைபூசுவதும் அவற்றை அழிப்பதே. அவை பெரும்பிழை. மதமரபின்படி மிகப்பெரிய ஆகமமீறல். அவற்றை செய்பவர்கள் பழியைத் தேடிக்கொள்கிறார்கள்

இந்த ஆத்திகப்பதர்களிடமிருந்து நம் ஆலயங்களைக் காப்பாற்ற இன்றைய நிலையில் கலையிலும் மரபிலும் ஆர்வம்கொண்ட ஐரோப்பியர்கள் தலையிட்டால்தான் ஏதேனும் விடிவு பிறக்கும். இவை மானுடகுலத்தின் சொத்து என்பதனால் அவர்களின் உடைமைகளும்கூட. இங்கே யுனெஸ்கோவால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஆலயங்கள் மட்டுமே பாதுகாப்பாக உள்ளன

ஆங்கிலத்தில் எழுதத்தெரிந்தவர்கள், ஊடகம் அறிந்தவர்கள் இப்பிரச்சினையை அவர்களிடம் கொண்டுசெல்வதே ஒரே வழி என நினைக்கிறேன். இந்த அறிவிலிகள் எதையாவது புரிந்துகொள்ள ஆரம்பிக்கையில் இங்கே ஆலயங்கள் அழிந்துவிட்டிருக்கும்

## (3) வாழும் சிற்பங்கள்

அன்புள்ள ஜெ,

தங்களுடைய சிற்பப் படுகொலைகள் (jeyamohan.in/327) என்ற கட்டுரையை சில ஆண்டுகளுக்கு முன்பு வாசித்த ஞாபகம் உண்டு. அதில் சிற்பங்கள் பற்றியும், அதன் நுணுக்கங்கள் பற்றியும் அறியாதவர்கள் அதனைப் புனருத்தாரணம் செய்கிறோம் என்ற பெயரால் ஏற்படுத்தும் அழிவுகளை விளக்கியிருந்தீர்கள். வாசிக்கும் போது அதிர்ச்சியாக இருந்தது. இன்றும் அந்த அழிப்புகள் தொடர்ந்து நிகழ்ந்துதான் வருகின்றது. நமது மன்னர்கள் விட்டுச் சென்ற முதுசொம் என்றால் அவை கோயில்களும் சிற்பங்களும்தான். இவற்றின் தாற்பர்யங்களை இன்றுள்ளவர்களுக்கு விளக்க முற்படுவது என்பது சாதாரணமான காரியமல்ல. அவற்றைச் சரியான முறையில் ஒழுங்குபடுத்திக் காப்பாற்றாமல் கும்பாபிஷேகங்களும், காவடிகளும் மேற்கொண்டு என்ன பலன் என்றும் எண்ணத் தோன்றுகிறது.

அண்மையில் பொன்வண்ணன் அவர்கள் தனது முகநூல் பக்கத்தில் சில சிற்பப் படங்களைப் பிரசுரித்திருந்தார். அவை கங்கை கொண்ட சோழபுரத்தின் சிற்பங்கள். எனக்கு உடனடியாக அதன் மறு பக்கமாகவுள்ள சிற்பப் படுகொலைகள்தான் ஞாபகம் வந்தது. சோழப் பேரரசின் ஆயிரமாண்டு கடந்த ஆச்சரியங்களும் இந்து மரபின் தொன்மங்களும் இன்னும் சிதைந்துவிடாமல் எமது பார்வைக்கு இருக்கின்றது என்பதை நினைக்கும் போது சற்று ஆசுவாசமளிக்கிறது.

அவரது புகைப்படங்கள் உங்கள் பார்வைக்கு.

சுயாந்தன்.

அன்புள்ள சுயாந்தன்

கங்கைகொண்ட சோழபுரம் ஆலயம் வரலாற்றில் இருக்கும். ஏனென்றால் அது மத்தியத் தொல்பொருள்துறை கட்டுப்பாட்டில், யுனெஸ்கோ ஆதரவில்

உள்ளது. 1982ல் நான் கங்கைகொண்ட சோழபுரத்தையும், தாராசுரத்தையும் பார்த்தேன். பாதிக்குமேல் இடிபாடுகளாகக் குவிந்து கிடந்தன. சென்ற 35 ஆண்டுகளாக கல் கல்லாக எடுத்துக் கட்டி எழுப்பப்பட்ட ஆலயங்கள் இவை. அவ்வாறு இந்தியாவில் மத்தியத் தொல்லியல்துறையும் யுனெஸ்கோவும் மீட்டெடுத்த பல ஆலயங்கள் உள்ளன. கஜுராகோ, சாஞ்சி போன்றவை மிகச்சிறந்த உதாரணங்கள். சமீபத்தில் படேஸ்வர் ஆலயத்தொகையை தொல்லியலாளர் கே.கே.முகம்மது அவர்கள் மீட்டெடுத்ததைப் பற்றி நான் எழுதியிருந்தேன். கர்நாடகத்தில் ஹொய்ச்சாள ஆலயங்கள் பல மத்தியத் தொல்லியல்துறையால் மீட்டுக் கட்டப்படுகின்றன. குஜராத்தின் ராணி கி வாவ் போன்றவை வலுப்படுத்தப்படுகின்றன

மத்தியத் தொல்லியல்துறை பெரும்பாலும் நிபுணர்களின் ஆலோசனைப்படிச் செயல்படுகிறது. இரண்டு நெறிகளை மாறாமல் கடைப்பிடிக்கிறார்கள். . ஒன்று, ஏற்கனவே இருந்த சிற்ப அமைப்பை எவ்வகையிலும் மாற்றுவதோ சேர்ப்பதோ இல்லை. இடிந்தவற்றை எடுத்து அடுக்குகிறார்கள். விடுபட்டவற்றைச் செய்து சேர்க்கிறார்கள். இரண்டு, ஓர் ஆலயம் எந்தக்கல்லில் கட்டப்பட்டதோ அதே கல்லையே பழுதுபார்க்கவும் பயன்படுத்துகிறார்கள்.

இவ்விரண்டையும் கடைப்பிடித்தாலேபோதும் நம் ஆலயங்கள் வாழும். ஆனால் தமிழக அறநிலையத்துறை ஆலயங்களில் எந்த கட்டுப்பாடும் கிடையாது. பெரும்பாலும் சுயநலவெறிகொண்ட அறிவிலிகளான பக்தர்களால் ஆலயங்கள் சூறையாடப்படுகின்றன. மணல்வீச்சு, கான்கிரீட் கட்டிடங்களை சேர்த்துக் கட்டுவது, சிற்பக்கூடங்களை பொருட்களைப் போட்டுவைக்குமிடமாக்குவது, கலைமண்டபங்களை கடைகளாக்குவது, மின்பொருட்களை பொருத்தவும் சாரங்களும் தூண்களும் அமைக்கவும் சிற்பங்களை உடைத்து துளைத்துச் சீரழிப்பது என இங்கு நிகழும் சூறையாடல்கள் வரலாற்றில் எப்போதும் நிகழாதவை.

நான் கண்ட சிற்பங்களில் பல இன்று சீரழிந்துவிட்டன. அடுத்த தலைமுறைக்கு கால்பங்கு சிற்பங்கள் சிதைந்தே சென்றுசேரும் என்பதே

இன்றுள்ள நிலை. இன்றுகட்டப்பட்ட சிமிண்ட் கட்டுமானங்கள் சிதைகையில் கணிசமான கோயில்கள் இடியவும்கூடும். [இதற்கிணையானது அனைத்து தொல்நெறிகளையும் கைவிட்டு இஷ்டத்துக்குச் செய்யும் பூசைகள். கருவறைகளுக்குள் நின்று கூச்சலிடுவது, செல்பேசியில் பேசுவது, பணம் பறிப்பது, காசுகொடுத்தால் எதைச்செய்யவும் அனுமதிப்பது. ஆனால் அது வேறு விஷயம்]

நம் பக்தர்களிடமிருந்து ஆலயங்களைக் காப்பாற்ற இன்று எந்த வழியும் தென்படவில்லை. ஒவ்வொருமுறை ஆலயங்களுக்குச் செல்லும்போது இவ்வாறு சுரணையற்ற மூர்க்கமான அழிவைக் கண்டு கொந்தளித்து திட்டி மனம்சோர்ந்து திரும்புவதே வழக்கமாக உள்ளது.

## (4) சிலைத்திருட்டுக்கள்

திரு ஜெ

சிற்பப் படுகொலைகள் என்றெல்லாம் ஆக்ரோஷமாக எழுதிய நீங்கள் தமிழகத்தில் ஏழாயிரம் சிற்பங்கள் திருடி விற்கப்பட்ட செய்தி வெளிவந்தபோது கொந்தளிப்பீர்கள் என ஒருமாசம் வரை எதிர்பார்த்து ஏமாந்தேன். திருடிவிற்றவர்கள் பார்ப்பனர்கள்தான் என்பதுதான் உங்கள் ஆழ்ந்த அமைதிக்கும் செய்தித்துறப்புக்கும் காரணம் என்று நினைக்கிறேன்.

ஜெயபாலன்

அன்புள்ள ஜெயபாலன்,

இச்செய்தி வெளிவந்தபோது இங்குள்ள திராவிட இயக்க ஆதரவாளர்கள் எழுதியதை அவ்வப்போது எவரேனும் எடுத்தனுப்பி கேள்வி கேட்டுக்கொண்டேதான் இருந்தார்கள். செய்தியை நான் துறந்தாலும் என்னை செய்தி துறப்பது அரிது. இன்றும் இச்செய்தியின் உள்ளடக்கம் எனக்கு முழுமையாகத் தெரியவில்லை. ஆகவே கருத்துச்சொல்லாமலிருக்கிறேன்.

அதேசமயம் கோயில் என்றால் என்ன, அங்குள்ள நிர்வாகம் எவ்வாறு நிகழ்கிறது, எவர் எதற்கெல்லாம் பொறுப்பு என்று எதுவுமே தெரியாமல் சிலைத் திருட்டு என்றதுமே அதை பிராமணப்பூசாரிகள்தான் விற்றிருப்பார்கள் என அவதூறுசொல்லி எம்பிக்குதிப்பவர்களை நான் நன்கறிவேன். வெறுப்பில் முளைத்தவர்களால் பொய்யால்தான் நிலைகொள்ளமுடியும்.

நான் ஊட்டியில் இருந்தபோது ஒருநாள் வெளியே என் பெயர் சொல்லி சிலர் பேசிக்கொள்வதைக் கேட்டேன். வெளியே சென்று அவர்களைச் சந்தித்தேன். என் வாசகர்கள். ஊட்டி வந்தபோது நாராயணகுருகுலம் வந்திருக்கிறார்கள். நான் அங்கிருப்பது அவர்களுக்குத் தெரியாது. அவர்கள் இந்து அறநிலையத்துறை அதிகாரிகள்.

அவர்களிடம் பொதுவாக பேசிக்கொண்டிருந்தேன். சிலைத்திருட்டு குறித்து நான் சற்று ஆக்ரோஷமாக எழுதியிருந்த கட்டுரையைக் குறிப்பிட்டு நீண்ட விளக்கங்களை அவர்கள் அளித்தனர். நான் அரசு ஊழியனாக இருந்தவன் என்பதனால் அதை துல்லியமாக என்னால் புரிந்துகொள்ளவும் இயன்றது

இந்து ஆலயங்களின் அதிகாரமும் பொறுப்பும் எவ்வகையிலும் கோயில்பூசகர்களான அந்தணர்களிடம் இல்லை என்பதை முதலில் நீங்கள் புரிந்துகொள்ளவேண்டும். அவர்கள் கிட்டத்தட்ட கடைநிலை ஊழியர்கள். மிகக்குறைவான ஊதியத்தில் மிக அதிகமான பொழுது பணியாற்றுபவர்கள். அவர்களில் சிலைத்திருட்டு போன்றவற்றில் ஈடுபடுபவர்கள் சிலர் இருக்கலாம், ஆனால் அது மிக அரிது. வாய்ப்புகளே அரிது என்று சொல்கிறேன்.

ஆலயநிர்வாகத்தில் அதிகாரப் பொறுப்பு கொண்டவர்கள் இருசாரார். ஒருதரப்பு தக்கார், இன்னொரு தரப்பு அறநிலையத்துறை அதிகாரிகள். இந்த தக்கார் என்னும் பொறுப்பு பெரும்பாலான ஆலயங்களில் பாரம்பரியமாக வருவது. பலசமயம் சில குறிப்பிட்ட குடும்பங்களைச் சார்ந்தது. அவர்கள் அவ்வூரின் பெரியமனிதர்களாகவும் செல்வந்தர்களாகவும் பெரும்பாலும் அரசியல்பின்னணி கொண்டவர்களாகவும் இருப்பார்கள். ஆலயநிலத்திலும் பெரும்பகுதி அவர்களின் கைகளிலேயே இருக்கும். அறநிலையத் துறை ஊழியர்கள் நேரடியான அரசூழியர்கள்

சென்ற எழுபதாண்டுக்கால ஆலய நிர்வாகத்தின் வரலாற்றை இப்படிச் சுருக்கிச் சொல்லலாம். பரம்பரை தக்கார் கைகளில் இருந்து அதிகாரத்தை

படிப்படியாக அறநிலையத் துறை அதிகாரிகளின் கைகளுக்கு மாற்றுவது. இதை சிறுகச்சிறுகத்தான் செய்திருக்கிறார்கள்.

முன்பு எம்.ஜி.ஆர் ஆட்சிக்காலத்தில் கிராமநிர்வாக அலுவலர் பதவியும் இப்படி பட்டாமணியம், கிராமக்கர்ணம் ஆகிய பரம்பரை ஊழியர் கைகளில் இருந்து அரசூழியர்களான கிராமநிர்வாக அலுவலர் கைகளுக்கு மாற்றப்பட்டது. ஆனால் அது நேரடியாக அரசு நிர்வாகத்துடன் தொடர்புடையத் துறை. ஆகவே உடனடியாக அம்மாற்றம் நிகழ்ந்தது. ஆனாலும் கடும் எதிர்ப்பு இருந்தது. எம்ஜிஆர் மேல் கொலைமுயற்சிகூட நிகழ்ந்தது. ஆனால் அந்த மாற்றம் கிராமநிர்வாகத்தில் இருந்த சாதிமேலாதிக்கத்தை ஒழித்து தமிழக முன்னேற்றத்தில் முக்கியமான காலடியாக அமைந்தது.

ஆலய நிர்வாகத்தில் அப்படிச்செய்ய பெருந்தயக்கம் உள்ளது. முதன்மைக்காரணம் ஆலயத்துறை பெரிய வருமானம் இல்லாதது. நேரடியாக அரசுடன் தொடர்பற்றது. இரண்டாவதாக இதில் சம்பிரதாயங்களும் மதமரபுகளும் உள்ளன. ஆகவே இன்றும்கூட தக்கார்முறை நீடிக்கிறது.

சென்ற இருபதாண்டுக்காலத்தில் ஆலயத் தக்காராக இரண்டாம்நிலை மூன்றாம்நிலை அரசியல்வாதிகள் நியமிக்கப்படுகிறார்கள். ஆலயச் சொத்துக்களைச் சுரண்டுவது உட்பட அனைத்திலும் இவர்கள் முன்னணியில் இருக்கிறார்கள். இன்று அறநிலையத்துறை ஊழியர்கள் இவர்களுடன் ஒத்துப்போகவோ முரண்பட்டு போராடி துன்பப்படவோதான் முடியும். அரசியல்வாதிகளின், பெரியமனிதர்களின் சுரண்டல் ஆக்ரமிப்பு எதுவுமே தண்டிக்கப்படுவதில்லை என்பதே நம் பண்பாடு.

சிலைகளைப் பொறுத்தவரை அறுபதுகளிலேயே கணிசமான சிலைகள் விற்கப்பட்டுவிட்டன. ஏராளமான ஊர்களில் சிலைகள், நகைகள் போன்றவை தக்கார்களின் இல்லங்களிலேயே இருந்தன. திருவிழாக்களுக்கு

அவை கொண்டுவரப்பட்டு திரும்பிக் கொண்டுசெல்லப்படும். அவற்றை சீர்நோக்க எவருக்கும் நடைமுறையில் அதிகாரம் இருக்கவில்லை.

அத்துடன் அன்று சிலைகளுக்கு வெறும் எண்களே இடப்பட்டு கையிருப்புப் பட்டியல் தயார் செய்யப்பட்டது. விவரணைகளோ புகைப்படப்பதிவுகளோ இல்லை. ஆகவே ஒரு சிலை மாற்றம் செய்யப்பட்டால் அதை கண்டுபிடிக்கவும் வழியில்லை.

கணிசமான கோயில்கள் ஆள்நடமாட்டம் இல்லாதவை. ஆகவே கிராமப்புற ஆலயங்களில் இருந்து சிலைகளை ஒட்டுமொத்தமாகக் கொண்டுவந்து ஒரு பெரிய கோயிலின் அறையில் அடைத்துப்போட்டு வைப்பது வழக்கம். இப்படி பல சிலைக்க்காப்பகங்கள் தமிழகத்து ஆலயங்களில் இன்றும் உள்ளன. அவற்றின் சாவி சமீபகாலம் வரை தக்கார் கைகளில் இருந்தது. இப்போது அறநிலையத்துறை அதிகாரிகள் கைகளில். எங்கும் அது பூசகர் கைகளில் இருப்பதில்லை

இந்த 'குடோன்களில்' இருக்கும் சிலைகள் ஓர் அறநிலையத் துறை அதிகாரி முந்தையவரிடமிருந்து பொறுப்பேற்கும்போது மட்டுமே திறந்து சரிபார்க்கப்படும். பெரும்பாலும் எண்ணிக்கையை மட்டுமே சரிபார்க்க முடியும். அரசுத்துறையில் மிக உதாசீனமாக செய்யப்படும் வேலை இந்த கையிருப்பு ஒப்படைப்பு. நடைமுறையில் சரிபார்க்கவே முடியாது. பின்னால் பின்னால் சென்று சென்றுகொண்டே இருக்கவேண்டியதுதான்.

அரிதாகச் சில கிறுக்குகள் அதைச்செய்வதுண்டு. தூசியும் புழுதியும்தான் எழுந்து வரும்.உண்மைக்குற்றவாளியை நெருங்கமுடியாது. பலசமயம் விண்ணுலகு சென்றுவிட்டிருப்பார். நான் என் பணிக்காலத்தில் ஒருமுறைகூட கையிருப்பை சோதனை செய்ததில்லை. கையெழுத்துபோட்டு பெற்றுக்கொள்வதுடன் சரி. தோண்டப்போனால் வெள்ளைக்காரன் ஆட்சிக்காலம் வரைச் செல்லவேண்டியிருக்கும்

சென்ற பதினைந்தாண்டுகளுக்கு முன்னர்தான் புதிய இந்திய ஆட்சிப்பணி அதிகாரிகள் பொறுப்பேற்றுக்கொண்டபோது சிலைகள் புகைப்படங்களுடன் ஆவணப்படுத்தப்பட்டன. அப்போதே கணிசமான சிலைகள் முன்பெப்போதோ மறைந்துவிட்டிருப்பதை கண்டறிந்தார்கள். ஆனால் எவரை பிடிப்பது? கடைசியாகக் கையெழுத்திட்ட அறநிலையத் துறை அதிகாரிதான் சிறைக்குச் செல்லவேண்டும். தொண்ணூறுவிழுக்காடு தருணங்களில் அவர் ஒன்றுமறியாத அப்பாவியாகவே இருப்பார். அரசியல்வாதிகளையோ உள்ளூர்ப்பிரமுகர்களையோ அவரால் ஒன்றும் செய்யவும் இயலாது.

சமீபகாலம் வரை அறநிலைய துறைக்கு தனி ஊழியர்கள் நேரடியாகத் தேர்வுசெய்யப்படுவதில்லை. பிற அரசுத்துறைகளில் இருந்து அங்கே அவர்கள் அனுப்பப் பட்டார்கள். அவர்களுக்கான தனித்தகுதிகளும் வரையறைசெய்யப்படவில்லை.அவர்களுக்கு வரலாறோ கலையோ தெரியாது. ஆகவே ஒரு சிலையை அடையாளம் காண்பதெல்லாம் அவர்களால் இயலாது. எல்லா அரசு அலுவலகங்களிலும் சம்பிரதாயமாக 'ஸ்டாக்' கணக்கு எடுப்பதுபோல சிலைகளுக்கும் கணக்கெடுத்திருப்பார்கள்.

சிலைத்திருட்டு பெருந்தொழில். அது முதன்மையாக தக்கார்களாலும் துணைநிற்கும் அறநிலையத் துறை அதிகாரிகளாலும் ஒத்துப்போகும் பூசகர்களாலும் செய்யப்படுகிறது. அதில் பங்கெடுத்த அந்தணர்கள் இருக்கலாம். ஆனால் அந்த வலையில் மிகக்கடைசியில் உள்ள மிகமிகப் பலவீனமான கண்ணியாகிய அந்தணப்பூசகர்களை முழுப்பொறுப்புக்கும் உரியவர்களாக ஆக்குவதில் உள்ளது அப்பட்டமான சாதிவெறியும் திருட்டுநோக்கும் மட்டுமே.

திருட்டுப்போன சிலைகளை இனிமேல் முறையாக கண்டுபிடிக்க முடியாது. ஏனென்றால் அவற்றுக்குச் சரியான ஆவணப்பதிவுகள் இருக்க வாய்ப்பில்லை. கூடுமானவரை பின்னால் தேடிச்சென்று மீட்கமுயலலாம்.

ஆனால் அது மிகப்பெரிய பணி.செலவேறியது. அதைச்செய்வார்களா என்று தெரியவில்லை

ஆனால் இப்போது என் பார்வை மாறியிருக்கிறது. பல ஊர்களில் ஆலயங்களில் இருந்து அரசு வெளியேறவேண்டும் என்ற கோரிக்கை உள்ளது. இவற்றில் முன்னிற்பவர்கள் பெரும்பாலும் இந்த பாரம்பரிய தக்கார்குடும்பங்களைச் சேர்ந்தவர்கள். எந்த அதிகாரத்திற்கும் கட்டுப்படாதவர்கள் இவர்கள். ஆலயத்திருப்பணி என்றபேரில் ஊழல்செய்பவர்களும், ஆலயங்களைப் பாழ்படுத்துபவர்களும் இவர்களே

ஆலயங்கள் அரசிடம் மட்டுமே இருக்கவேண்டும் என நினைக்கிறேன். அவை ஆத்திகர்களின் சொத்து அல்ல, கலைமையங்கள் வரலாற்றுச் சின்னங்கள் என்றவகையில் அனைத்து மக்களுக்கும் உரியவை. இந்துக்கள் இஸ்லாமியர் கிறிஸ்தவர் என அனைவருக்கும் உரிமைப்பட்டவை. அவற்றை அரசுதான் பாதுகாக்க முடியும். முறையான பதிவு, அறிவியல்பூர்வமான கணக்குவைப்புமுறை, தொடர்ச்சியான வெளிப்படையான கண்காணிப்பு ஆகியவையே இன்றைய தேவை.

## (5) திருவட்டாறு பேராலயம்- ஒரு வரலாறு

நமது பண்டைய ஆலயங்கள் வழிபாட்டுமையங்கள் மட்டுமல்ல, அவை கலைக்கூடங்களும் வரலாற்றுக் களஞ்சியங்களும்கூட. சிதம்பரம், மதுரை, திருவண்ணாமலை, ஸ்ரீரங்கம் போன்ற நமது பேராலயங்கள் முக்கியமான அதிகாரமையங்களாக இருந்தன. அவற்றை அச்சாகக் கொண்டு அன்றைய பொருளியல் கட்டுமானமும், சமூக அடுக்குமுறையும் உருவாக்கப்பட்டிருந்தது. இவ்வாலயங்களில் பல்லாயிரம் கல்வெட்டுகளும் பிற ஆவணப்பதிவுகளும் உள்ளன. ஒரு நவீன வரலாற்றாசிரியனுக்கு ஒவ்வொரு ஆலயமும் ஒரு மாபெரும் வரலாற்று நூல்போல.

பொதுவாக வரலாற்றாய்வின் இன்றைய காலகட்டத்தை நுண்வரலாற்றெழுத்தின் காலம் எனலாம். பொதுவாகவும் ஒட்டுமொத்தமாகவும் தமிழக வரலாறு எழுதப்பட்ட காலம் முடிவுக்கு வந்துவிட்டது. அதாவது வரலாற்றுக்கு ஒரு கோட்டுச் சித்திரத்தை வரையும் பெருவரலாற்றெழுத்துப் பணி நிறைவுற்றுவிட்டது. இனி அதன் உட்கூறுகளை ஆழமாக கவனித்து அவற்றை மேலும் மேலும் செம்மைப்படுத்தி அந்தக் கோட்டுச்சித்திரத்துக்கு வண்ணமும் நுண்மையும் அளிக்க வேண்டும். அதற்கு நம் ஆலயங்கள் பெரிதும் உதவக்கூடியவை

அந்நோக்கில் பொதுவாக இன்னும் நம் வரலாறு விரிவாக எழுதப்படவில்லை. நமது பேராலயங்கள் எதைப்பற்றியும் விரிவான வரலாற்றாய்வு நூல்கள் இல்லை. பக்தி நோக்கிலும் வழிபாட்டு நோக்கிலும் எழுதப்பட்ட மேலோட்டமான பதிவுகளே காணக்கிடைக்கின்றன. அவ்வகையில் முன்னோடியான நூல் கே.கே.பிள்ளை ஆங்கிலத்தில் எழுதிய ‘சுசீந்திரம் டெம்பிள்’ என்ற பெருநூல். பதினேழு வருட உழைப்பின் விளைவாக உருவான அந்த ஆய்வுநூல் சுசீந்திரம் ஆலயத்தின் கல்வெட்டுகள், அதைப்பற்றிய ஆவணப்பதிவுகள், அவ்வாலயத்து நம்பிக்கைகள் ,சமயச்சடங்குகள், அங்குள்ள பல்வேறு சிற்பங்கள், அவ்வாலயத்தைச் சார்ந்து உருவான நிலமானிய முறை, வரலாற்றில் அதன் இடம் என அனைத்தையும் ஆய்வாளருக்கு இன்றியமையாத விருப்புவெறுப்பற்ற , முன்முடிவுகளற்ற நோக்கில் விரிவாகப் பதிவுசெய்வது. இவ்வகையில் இன்றும் அது ஒரு ‘கிளாசிக்’ ஆகும்.

தமிழில் அதற்கு இணையான நூல்கள் இல்லை என்றாலும் முக்கியமாகக் குறிப்பிடப்படவேண்டியது தொ.பரமசிவனின் 'அழகர்கோயில்' என்ற ஆய்வு நூல். ஆய்வாளரின் முனைவர் பட்ட ஆய்வேடு இது. விரிவாக அழகர்கோயிலை ஆராய்ந்து பதிவுசெய்யும் பரமசிவம் காலந்தோறும் அந்த ஆலயம் வளர்ந்தும் கைமாறியும் வந்த வரலாற்றை நுட்பமாக உருவாக்குகிறார். குறிப்பாக அழகர்கோயிலைச் சுற்றி உருவான நிலமானிய அமைப்பையும் சாதிக்கட்டுமானத்தையும் அவை திருவிழாக்களில் அடுக்கதிகாரமாக வெளிப்படும் முறையையும் விரிவாக வரைந்து காட்டுகிறார். தமிழில் இவ்வகையில் இன்றும் இதுவே செவ்வியல்தன்மை கொண்ட முதல்வழிகாட்டி நூல்.

நுண்வரலாற்றை உருவாக்கும் ஆய்வுகளில் முன்னணியில் நிற்பவர்களில் ஒருவர் அ.கா.பெருமாள். ஏற்கனவே இவர் பறக்கை மதுசூதனப்பெருமாள் ஆலயத்தைப்பற்றி சிறிய நூல் ஒன்றை எழுதியிருக்கிறார். குமரிமாவட்டத்தின் வரலாற்றை 'தென்குமரியின்கதை' என்றபேரில் எழுதியிருக்கிறார். குமரிமாவட்ட வரலாற்றாய்வின் முக்கிய ஆவணங்களாக விளங்கும் முதலியார் ஓலைச்சுவடிகளை விரிவான குறிப்புகளுடன் பதிப்பித்திருக்கிறார். இவ்வரிசையில் அவரது முக்கியமான நூல் 'ஆதிகேசவப்பெருமாள் ஆலயம்- திருவட்டாறு கோயில் வரலாறு'

*

திருவட்டாறு ஆலயம்பற்றிய இந்நூலுக்கு என்னைப்பொறுத்தவரை ஒரு தனி முக்கியத்துவம் உண்டு. என் அப்பாவின் முன்னோர்கள் இந்த ஆலயத்தின் ஊழியர்கள். ஆனால் வைணவர்கள் அல்ல, பகவதியை வழிபடுகிறவர்கள். தொன்மையான இந்தப் பேராலயம் திருவிதாங்கூர் மன்னர்களின் குலதெய்வமாக விளங்கியிருக்கிறது. பின்னர் இதன் வடிவிலேயே திருவனந்தபுரம் அனந்தபத்மநாபசாமி ஆலயம் கட்டபட்டது. இவ்வாலயத்தின் வரலாறென்பது ஒருவகையில் நான் வாழும் நிலத்தின் வரலாறும் கூட. 'விஷ்ணுபுரம்' நாவலுக்கு கருவாக அமைந்த கோயிலும் இதுவே.

இங்கே ஆதிகேசவன் ஒன்றில் பாதம், இன்னொன்றில் உந்தி, பிறிதில் மணிமுடி என மூன்று கருவறைகளை நிறைத்து மல்லாந்து மகாயோக

நிலையில் படுத்திருக்கிறார். இந்தியாவில் உள்ள புகழ்பெற்ற எல்லா பெருமாள் சிலைகளையும் நான் கண்டிருக்கிறேன். ஆதிகேசவப்பெருமாள் அளவுக்கு பேரழகு கொண்ட சிலை ஏதுமில்லை. இருளுக்குள் பளபளக்கும் கன்னங்கரிய திருமேனி. நாசியின் கூர்மையும் புன்னகை இருக்கிறதா இல்லையா என்று தெரியாத உதடுகளும், குவிந்து மூடிய கண்களும் ஒருபெரிய கனவு போல் நம் கண்முன் விரியக்கூடியவை.

அ.கா.பெருமாள் அவர்கள் ஒன்பது அத்தியாயங்களிலாக இந்நூலை அமைத்துள்ளார். 'வளநீர் வாட்டாறு' என்ற முதல் அத்தியாயத்தில் இவ்வாலயத்தின் தொன்மையான வரலாறு குறிப்பிடப்படுகிறது. 'வளநீர் வாட்டாறு' என்ற சொல்லாடி புறநாநூறில் உள்ளது. [பாடல் 396] வாட்டாற்றை தலைநகரமாகக் கொண்டு ஆண்ட எழினியாதன் என்ற மன்னனைப்பற்றிச் சொல்கிறது இப்பாடல். தொடர்ந்து தொல்சேரர் வரலாற்றிலும் பின்னர் சோழர் வரலாற்றிலும் கடைசியாக திருவிதாங்கூர் [வேணாட்டு] மன்னர்களின் வரலாற்றிலும் இவ்வூர் கொண்டிருக்கும் முக்கியத்துவத்தை விரிவான ஆய்வுகளுடன் அ.கா.பெருமாள் ஆராய்கிறார்

'வானேற வழிதந்த வாட்டாறு' என்ற இரண்டாம் அத்தியாயம் ஒரு தலமாக இவ்வாலயத்தின் இடத்தை விளக்குகிறது. அவ்வாறு இவ்வூரை வாழ்த்திய நம்மாழ்வார் இத்தலத்தை மங்களசாசனம் செய்திருக்கிறார். 'மலைமாடத்து வாட்டாற்றான்' என்ற மூன்றாம் அத்தியாயம் இக்கோயிலின் கட்டுமான அமைப்பையும் சிறப்பையும் விளக்குகிறது. கேரள பாணி கட்டிடக்கலையின் தலைசிறந்த உதாரணங்களில் ஒன்றான இந்தக் கோயில் சிறு குன்று ஒன்றை உள்ளடக்கி அமைக்கப்பட்டதனால் உயரமான அடித்தளம் கொண்டது. நான்குபக்கமும் கேரளபாணி நாலம்பல முகடுகள் கொண்டது. செம்பு வேயப்பட்ட கூம்புவடிவ கருவறை. விரிந்த சுற்றுப்பிராகாரம்.

'அரவணைமேல் பள்ளி கொண்டான்' என்ற நான்காவது அத்தியாயம் ஆலயத்தின் கருவறையையும் மூலச்சிலையான ஆதிகேசவனையும் மற்ற பரிவார தேவதைகளையும் விரிவாக விளக்குகிறது. 16008 சாலக்கிராமங்களால் கட்டப்பட்டு மேலே கடுசர்க்கரைப்பூச்சு கொண்ட இத்திருமேனி 6.60 மீட்டர் நீளம் கொண்டது. சமசயன நிலையில் மும்மடிப்பு கொண்ட ஆதிசேடன் மீது பெருமாள் பள்ளி கொண்டிருக்கிறார்.

‘இரணியனை மார்பு இடந்த வாட்டாறு’ என்ற ஐந்தாம் அத்தியாயம் தலபுராணத்தை விளக்குகிறது. இந்த தலபுராணம் ஒப்புநோக்க அண்மைக்காலத்தையதாகும். ஆறாம் அத்தியாயத்தில் இவ்வாலயத்தின் பூசை முறைகள் பூசகர்கள் மற்றும் ஊழியர்களின் வரலாறு விளக்கப்படுகிறது. முற்காலத்தில் நம்பூதிரிகளால் பூசை செய்யப்பட்ட இவவலயம் மார்த்தாண்டவர்மா மகாராஜாவுக்குப் பின்னர் துளு பிராமணர்களால் பூசை செய்யப்படுகிறது. தலைமை பூசாரி நம்பி எனப்படுகிறார். அவர் மூன்று வருடங்கள் பதவியில் இருப்பார். பதவிக்காலத்தில் அவர் பூசையல்லாத நேரத்தில் தனிமையில் துறவு வாழ்க்கை வாழ வேண்டும். இங்கு தாந்த்ரீகமுறைப்படி பூசை நடந்துவருகிறது. இங்குள்ள சிறப்பு தாந்த்ரீக பூஜைகளைச் செய்பவர்கள் தந்த்ரிகள் எனப்படுகிறார்கள். மணலிக்கரை போத்தி, அத்தியறைப்போத்தி என்ற இரு துளுபிராமண இல்லங்கள் தந்திரிகளாக உள்ளனர்

ஏழாம் அத்தியாயத்தில் இவ்வாலயத்தின் நித்யபூஜைகளையும் திருவிழாக்களையும் விரிவாக குறிப்பிடுகிறார் அ.கா.பெருமாள். எட்டாம் அத்தியாயம் இங்குள்ள சிற்பங்களைப்பற்றியது. இங்குள்ள முக மண்டபத்தில் உள்ள மரச்சிற்பங்கள் மிக நுட்பமானவையும் அபூர்வமானவையுமாகும். தமிழகத்தில் இதற்கிணையான சிற்பங்கள் வேறு இல்லை, கேரளத்திலும் குறைவே. இங்குள்ள ரதிமன்மத கற்சிலைகளும் அர்ஜுனன் கர்ணன் சிலைகளும் மிக எழிலார்ந்தவை கருவறையைச்சுற்றியுள்ள சுவரோவியங்களும் அபூர்வமானவை

ஒன்பதாம் அத்தியாயத்தில் கோயில் கல்வெட்டுகளை வரலாற்று நோக்கில் ஆய்வுக்கு உள்படுத்துகிறார் அ.கா.பெருமாள். விரிவான பின்னிணைப்புகளில் கோயிலைப்பற்றிய அசல் ஆவணங்கள் விரிவாக அளிக்கப்பட்டுள்ளன. தனிப்பகுதியாக கோயிலின் கிட்டத்தட்ட நூறு புகைப்படங்கள் அளிக்கப்பட்டுள்ளன.

வரலாற்றாய்வாளர்களுக்கு ஒரு முதன்மையான மூலநூலாக அமையும் தன்மை கொண்டது இது. பெருமாள் அவர்களின் நோக்கி மதம் சாராத வரலாற்றாய்வாளரின் நேரடியான நோக்கு என்பது இந்நூலின் நம்பகத்தன்மையை உறுதி செய்கிறது. இதன் முக்கியமான குறை என்பது இவ்வாலயத்தை ஒட்டி இருந்த சமூக அமைப்பையும் நிலமானிய முறையையும் இன்னும் விரிவாக ஆராய்ந்திருக்கலாம் என்பதே. ஏழாம்

அத்தியாயத்தில் கோயிலின் நிர்வாக முறையும் ஊழியர்மரபும் தொட்டுக் காட்டப்படுகின்றன. அவற்றை மேலும் விரிவாக்கி அந்த குடும்பங்களையும் ஆய்வுக்கு உட்படுத்தி ஒரு சித்திரத்தை உருவாக்கியிருக்கலாம்.

தமிழகத்தில் உள்ள முக்கியமான ஐம்பது ஆலயங்களைப்பற்றியாவது உடனடியாக இத்தகைய ஆய்வுநூல்கள் எழுதபப்டவேண்டியது இன்றியமையாததாகும். நாம் காணும் தமிழக வரலாற்றின் சித்திரம் மேலும் துலக்கமுற அது உதவும்

ஒர் ஆய்வுநூலில் எதிர்பார்க்க முடியாத அளவுக்கு அழகுடன் இந்நூலை உருவாக்கியிருக்கிறது தமிழினி. சென்றவருடத்திய மிக அழகான அட்டைப்படங்களில் ஒன்று இந்நூலுக்குரியது.

## (6) சோழர்கலை

பிற்காலச் சோழர்காலம் தமிழ் சிற்பக்கலையின் மறுமலர்ச்சிக்காலமும் பொற்காலமும் ஆகும். தமிழ்நாட்டின் சிற்பங்களின் மூன்று முக்கியமான ஊடகங்களில் சோழர்கள் சாதனை புரிந்திருக்கிறார்கள். கல்,சுதை,வெண்கலம் [மற்றும் பஞ்சலோகம்] இவை மூன்றும் மூன்றுவகையான நுண் அழகியல் ஓட்டங்களாக வளர்ந்து முழுமை பெற்றிருக்கின்றன. தமிழகத்துக் கலைகளைபப்ற்றிய விவாதங்களில் அதிகமாக பேசப்பட்டது சோழர்கலை குறித்தே. அது இயல்பும் ஆகும். சோழர்காலக்கலை என்பது அறியும்தோறும் பெருகுவது.

சோழர்கலைப்பாணியை எளிமையான வாசகர்கள் அறிவதற்கு உதவியாக இருக்கும் நூல்களில் குறிப்பிடத்தக்கது எஸ்.ஆர்.பாலசுப்ரமணியம் எழுதிய சோழர்கலைப்பாணி என்ற நூல். 1966ல் அன்றைய சென்னை பல்கலை துணைவேந்தர் சர்.சி.பி.ராமசாமி அய்யர் அவர்களின் முன்னுரையுடன் வெளிவந்த நூல் இது. பல அடிப்படையான கருத்துகக்ளை முதலிலேயே நம் மனதில் தெளிவு படுத்தும் இந்தநூலின் முக்கியமான சிறப்பே மிகையோ அலங்காரமோ இல்லாத தெளிவான கச்சிதமான கூறுமுறையும் நிதானமான அணுகுமுறையும்தான்.

தமிழ்நாட்டுச் சிற்பக்கலை இன்றுள்ள வளர்ச்சியை பல்லவர் காலத்தில் இருந்து பெறத்தொடங்கியதாகச் சொல்வது மரபு. மாமண்டூர் போன்ற இடங்களில் உள்ள குடைவரைக்கோயில்கல் முதல்கட்ட சிற்பக்கலைக்கு உதாரணங்கள். பின்னர் மகாபலிபுரம் போன்ற இடங்களில் உள்ள ஒற்றைக்கல் குடைவுக் கோயில்கள். பின்னர் கைலாசநாதர் ஆலயம் போன்ற தனிப்பெரும் கோயில்கள் உருவாயின.

பல்லவர்கள் விட்ட இடத்திலிருந்து சோழர்களின் கலைப்பாணி வளர்ச்சி கொள்கிறது. சோழர்காலக்கலையை முதற்காலம் இடைக்காலம் நடுக்காலம் என்று ஆசிரியர் பகுக்கிறார். முதற்காலம் முதலாம் ராஜராச சோழனுக்கு முற்பட்டது. கிபி 985 வரையிலானது. இடைக்காலம் 1070 வரையிலானது. அதாவது குலோத்துங்கசோழனின்

காலத்துக்கு சற்று முன்புவரை. கடைக்காலம் இரண்டாம் ராஜ ராஜ சோழன் முதல் 1270 வரை பிற்காலச்சோழர்களின் ஆட்சி முடியும்காலம் வரையிலானது.

முதற்காலகட்டத்தில் பல்லவர்களின் கோயில்களின் மாதிரியை பின்பற்றி உருவாக்கப்பட்ட சிறியகோயில்கள் ஏராளமாக உருவாயின. கருவறைமீது சிறிய கோபுரமும் முன்பக்கம் ஒரு அர்த்தமண்டபமும் கொ¡ண்ட கற்கோயில்கள் இவை. இந்தப்பாணிக்கு மிகச்சிறந்த உதாரணம் புதுக்கோட்டை நார்த்தாமலை அருகே உள்ள விஜயாலயச் சோளீச்வரம். அங்குள்ள மணற்கல் கோயில்கள் தஞ்சைப் பெரிய கோயிலின் சிறுவடிவங்களோ என மயங்கச் செய்பவை. அவை பெருகிப்பெருகி சோழர்கால கலைக்கோயில்கமரபாக மாறின
இடைக்காலகட்டத்தில் சோழர்களின் கோயில்கட்டும்கலை உச்சத்தை அடைந்து தமிழ்ப்பண்பாட்டின் பெரும் சாதனைகளை உருவாக்கியது. தஞ்சை பெருவுடையார் ஆலயம், கங்கைகொண்டசோழபுரம் ஆகியவை இக்காலகட்டக் கலையின் மிகச்சிறந்த உதாரணங்கள். கடைக்காலத்தின் மிகப்பெரிய சாதனை தாராசுரம் கோயில்.அடுத்தகட்டமும் இறுதி வெற்றியும் என திரிபுவனம் ஆலயத்தைச் சொல்லலாம்.

இந்நூலில் மன்னர்களின் கலைச்சேவைகளைப் பற்றி மட்டும் பேசப்படவில்லை. சிதம்பரம் கோயிலை எடுத்துக்கட்டிய நரலோகசிங்கன் என்ற சோழர்கால அமைச்சரின் சாதனை விரிவாக எடுத்துச் சொல்லபப்டுகிறது. திரிபுவனம், சூரியனார் கோயில் போன்ற சோழர்காலக் கோயில்களின் தனிச்சிறப்பை நாம் இந்நூலில் வாசித்தே புரிந்துகொள்ள முடிகிறது.

தமிழகத்தின் பண்டைய கோயில்கள் அமைந்த விதம் அது பல்லவர் காலத்தில் அடைந்த வளர்ச்சி ஆகியவற்றை தனி அத்தியாயங்களில் விளக்கிவிட்டு சோழர் கலையின் தனித்தன்மைகளை விளக்க ஆரம்பிக்கிறார் ஆசிரியர். சோழர் கோயில்கள் விரிவான சுற்றுமதில், வெளிப்பிராகாரங்கள், துணைச்சன்னிதிகள் ஆகியவற்றுடன் அமைந்தவை. சோழர்கள் செங்கற்றளிகளை கற்றளிகளாக ஆக்கினார்கள்.

பின்னர் அவற்றை பெருங்கோயில்களாக அமைத்து அவற்றுக்கு திருக்கட்டளைகள் என்று பெயரிட்டனர்.

சோழர்களின் முதற்காலகட்டத்தில் பரகேசரி விஜயாலயன் முதலே ஆலயத்திருப்பணிகள் தொடங்கிவிட்டன. இக்கால கட்டத்து கோயில்களில் தஞ்சை நிதம்பசூதனி கோயிலும் திருவெள்ளறை திருமாணிக்கப்பெருமாள் கோயிலும்  நார்த்தாமலை விஜயாலய சோழீஸ்வரமும் முக்கியமானவை என்று சொல்லப்பட்டு அவற்றின் தனிச்ச்சிறப்பு விளக்கப்படுகிறது. ஆதித்த சோழன், முதலாம் பராந்தக சோழன், சுந்தர சோழன் என்னும் இரண்டாம் பராந்தகன் ஆகியோரின் காலகட்டத்து கோயில்களை விரிவாக எடுத்து பேசுகிறார்

முதலாம் ராஜராஜ சோழனின் கோயில்களில் மைய இடம் வகிக்கும் தஞ்சை பெரிய கோயிலின் அமைப்பு சிற்பச்சிறப்பு ஆகியவற்றை விரிவான தகவல்களுடன் ஆசிரியர் எடுத்துக்கூறுகிறார். ஒப்புநோக்க மிகக் குறுகிய காலகட்டத்தில் கட்டபப்ட்ட கோயில் அது என்பது அவரது எண்ணம். அதற்கும் கங்கை கொண்ட சோழபுரம் கோயிலுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் பேசப்படுகின்றன.

பொதுவாக தஞ்சை பெரியகோயில், கங்கை கொண்ட சோழபுரம் , தாராசுரம் ஆகிய மூன்று பெருங்கோயில்கள் மட்டுமே சோழர் காலகலையின் வெற்றியையும் சிறப்பையும் சொல்லிவிடக்கூடியவை. இக்கோயில்களின் புறச்சுவர்களில் உள்ள சிற்பங்களில்தான் உணர்ச்சிவெளிப்பாடு மிகச்சிறப்பாக நிகழ்ந்திருக்கிறது. விரிவான புகைப்படங்கள் கொண்ட இந்த நூல் ஒவ்வொரு கோயிலுக்கும் உள்ள தனித்தன்மையை சிறப்பாக எடுத்துச் சொல்கிறது

சோழர்களின் கோயில்களில் கோபுரங்கள் மிகச்சிறப்பானவை. கருவறைக்குமேல் எழுந்து நிற்கக்கூடிய பிரம்மாண்டமான கற்கோபுரங்கள். சிறு சிறு சிகரங்களை அடுக்கி எழுப்பபப்பட்வை. நுண்மையான கணக்குகளுடன் அவை உருவாக்கப்பட்டிருக்கின்றன. சோழர்

காலக்கோபுரங்களின் வளர்ச்சி பின்னர் நாயக்கர் காலத்தில் மேலும் முழுமை பெற்றது

கோபுரங்களில் சுதைச்சிற்பங்கள் அமைப்பது சோழர்காலத்தில் ஆரம்பித்து பின்னர் மேலும் வளர்ச்சி பெற்றது. சுதைச்சிற்பங்கள் கற்சிற்பங்கள் போல அல்லாமல் முற்றிலும் வேறுவகையான காட்சிச்சிறப்பு கொண்டவை.

சோழர்களின் காலத்தில் உலோகச்சிற்பங்கள் செய்யும் கலை அதன் உச்சத்தை அடைந்தது. சோழர்கால உலோகச்சிற்பங்களின் முழுமை அதன்பின் இன்றுவரை அடையப்படவில்லை. சோழர்கால உலோகச் சிற்பங்களின் முழுமுதல் உதாரணம் என நடராஜர் சிலைகளைத்தான் சொல்லவேண்டும். பத்தூர் நடராஜர் அதற்குச் சிறந்த உதாரணம். சிவகாமசுந்தரர், பிட்சாடனர் போன்ற சிலைகளும் முக்கியமானவை. சிலைகளின் நுண்ணிய முகபாவனைகளில் பேரழகுகளை உருவாக்கினர் சோழர் காலச் சிற்பிகள்.

சோழர்காலக் கலையைப்பற்றிய எளிய முதல் அறிமுகத்துக்கான அழகிய நூல் இது. எஸ்.ஆர் பாலசுப்ரமணியன் சோழர்காலக் கலை குறித்து ஆங்கிலத்தில் **Early Chola Art , Early Chola Art and Architecture** போன்ற நூல்களை எழுதியவர்.

## (7) சிற்பப் படுகொலைகள்

‘சுத்திகரிப்பு’ என்பதற்கு ‘அழித்தொழிப்பு’ என்று பெயர் உண்டு என்று · பாஸிஸம் கற்பித்தது. சமீபத்தில் கவிஞர் சேரனுடன் திருவட்டாறு கோயிலுக்குச் சென்றிருந்தபோது அதை நினைவுகூர்ந்தேன். திருவட்டாறு கோயிலில் சீரமைப்புப் பணிகள் நடந்துவருகின்றன. மகாகும்பாபிஷேகம் நடக்கவிருக்கிறது. அதன் பொருட்டு கோயிலில் உள்ள சிற்பங்களையெல்லாம் மணல்வீச்சு முறையில் சுத்தம் செய்திருக்கிறார்கள். விளைவாக சிறுவயது முதலே என் மனதைக் கவர்ந்த சிற்பங்கள் அனைத்தும் கல்பிண்டங்களாக மாற்றப்பட்டுவிட்டிருக்கின்றன.

சிற்பங்களில் காலப்போக்கில் படியும் அழுக்கையும் எண்ணைப்பூச்சையும் களைவதற்காக இம்முறை கையாளப்படுவதாகச் சொல்கிறார்கள். நுண்ணிய மணலானது ஒரு யந்திரம் மூலம் அதிவேகமாக சிற்பங்களை நோக்கி பீச்சியடிக்கப்படுகிறது. விளைவாக சிற்பங்களின் மேல்பூச்சு அப்படியே சிதைத்து அகற்றப்படுகிறது. இந்த முட்டாள்தனமான முறையை யார் இங்கே கொண்டு வந்தார்கள் என்று விசாரித்தால் அது உலகப்புகழ்பெற்றமுறை என்றும், அறிவியல் பூர்வமானது என்றும், இந்திய ஆலயங்களை இவ்வகையில் சுத்தம்செய்வதை யுனெஸ்கோ அமைப்பு பரிந்துரைத்து நிதியும் அளிக்கப்படுகிறது என்றும் சொல்கிறார்கள்.

நடைமுறையில் நம் கண்ணெதிரே நமது சிற்பச் செல்வங்கள் சிதைந்து அழிகின்றதையே நாம் காண்கிறோம். ஆனால் அது சிற்பங்களுக்கு நல்லது என்றும்  எந்த தீங்கும் ஏற்படாது என்றும் நம்மிடமே மீண்டும் மீண்டும் சொல்கிறார்கள். ஏனெனில் அது ‘வெளிநாட்டு’ நிபுணர்கள் உருவாக்கிய முறை!

நமது சிற்பங்களைப்பற்றியோ, அவற்றுக்கு பயன்படுத்தப்பட்டுள்ள வெவ்வேறு கற்களைப்பற்றியோ எந்த விதமான புரிதலும் இல்லாத அன்னியர்களால் உருவாக்கப்பட்ட முறை இது என்பது கண்கூடு. விஷயம் அறிந்தவர்களிடம் கேட்டுப்பார்த்தபோது கற்சுவர்களையும் கட்டுமானங்களையும் மட்டுமே  இம்முறையால் சுத்தம் செய்ய வேண்டும் என்றும் சிற்பங்களை ஒருபோதும் இதன் மூலம் சுத்தம் செய்யலாகாது என்றும் சொன்னார்கள். யுனெஸ்கோ சொல்லிவிட்டதனாலேயே நிதி பெறும்பொருட்டு மூர்க்கமாக இதைச் செய்கிறார்கள். சிற்பங்கள் அழிவது

அனைவருக்கும் தெரியும். சிற்பிகள் இதைபப்ற்றி கடுமையான மாற்றுக்கருத்துக்களைச் சொல்லிவருகிறார்கள். ஆனால் நிதிபெறும் உயர்மட்டங்களில் முடிவுகள் எடுக்கப்படுவதனால் எவருமே எதுவும் சொல்வதில்லை.

மணல்வீச்சு மூலம் சுத்தம்செய்யலாம் என்று சொல்பவர்கள் கூட தகுந்த நிபுணர்களால் சிற்பங்களின் கல்லின் இயல்பை ஆராய்ந்து மதிப்பிடப்பட்ட பின்னர் மிகுந்த கவனத்துடன் செய்யபப்ட வேண்டிய வேலை இது என்றுதான் சொல்கிறார்கள். நடைமுறையில் இரண்டாம் ஒப்பந்தம், சில்லறை மறுஒப்பந்தம் என அவ்வேலை கைமாறி எந்தவிதமான பயிற்சியும் இல்லாதவர்களால் மனம்போனபடி செய்யப்படுகிறது. கிட்டத்தட்ட சுத்தியலால் சிற்பங்களை அடித்து உடைத்து வீசுவதற்கு நிகர் இது.

திருவட்டாறு ஆலயத்தின் சுற்றுப்பிராகாரத்தில் உள்ள தீபபாலிகை சிலைகள் மிக நுட்பமானவை. சற்று மென்மையான மணல்கல்லில் செதுக்கபப்பட்டவை. நூற்றுக்கணக்கான சிற்பங்களில் ஒரு சிற்பத்தின் காதணி, கழுத்தணி, தலையலங்காரம் எதுவும் இன்னொரு சிற்பத்தில் இருக்காது. இதை நான் பல நண்பர்களுக்குக் காட்டியிருக்கிறேன். இன்று எந்தச் சிற்பத்திலும் நகைகளோ அணிகளோ தென்படாமல் மொத்தையான உருவங்களாக மாறிவிட்டிருக்கின்றன. எல்லா சிற்பங்களிலும் மூக்கு முழுமையாகச் சிதைந்து போய்விட்டிருக்கிறது. உதடுகளை சிறு குமிழ் போல அமைப்பது நம் சிற்ப மரபு. இச்சிற்பங்களில் இப்போது உதடுகளும் இல்லை. முகங்கள் நீள்கோள வடிவத்தில் மொத்தையாக மாறிவிட்டன. பல சிற்பங்கள் உடைந்தும் பிளந்தும் நிற்கின்றன

முகமண்டபத்தில் உள்ள அர்ஜுனன், கர்ணன், கங்காளர், கோபாலகிருஷ்ணன் சிலைகள் மிக அபூர்வமான சிற்ப நுட்பங்கள் கொண்டவை. முன்பு அவற்றைப்பார்த்தால் அவை உலோகச்சிலைகள் என்று தோன்றும். மிகுந்த கவனத்துடன் அவற்றுக்கு ஒரு பளபளப்பை சிற்பி அளித்திருப்பான். கன்னங்கள் பக்கவாட்டு ஒளியில் மின்னும். சிலைகளின் உடைகளிலும் நகைகளிலும் உள்ள நுண்ணிய வேலைப்பாடுகள் பிரமிக்க வைக்கும். இப்போது அவை அப்படியே உரிக்கப்பட்டு எந்த விதமான நுட்பங்களும் இல்லாமல் நிற்கின்றன. பல இடங்களில் கைகளும் கால்களும் உடைந்து சிமிண்டால் செய்து இணைக்கப்பட்டிருக்கின்றன. சிலைகளின்

கண்கள் நகங்கள் போன்றவற்றில் இருந்த நுண்ணிய கோடுகள், வரிகள் எதுவுமே இல்லை.

அ.கா.பெருமாள் எழுதிய ‘தென்குமரியின்கதை’ என்ற நூல் [தமிழினி] அட்டையில் வசந்தகுமார் எடுத்த ஒரு நல்ல புகைப்படம் உள்ளது. சிதறால் மலைமீது பார்ஸ்வநாதரின் சிலை அருகே நிற்கும் பத்மாவதி யக்ஷியின் அழகிய சிலை. குமரியின் முகவடிவமாக முன்வைக்கப்பட்ட அச்சிலையை இன்று பார்க்கமுடியாது. சிதைந்து முலைகளும் முகமும் உடைந்து நிற்கிறது. இருவருடங்களுக்கு முன் மாவட்ட ஆட்சியர் தலைமையில் அங்கே சீரமைப்புப் பணிகள் தொடங்கி நடந்த போது மணல்வீச்சு மூலம் அந்தச்சிலை சுத்தம் செய்யபப்ட்டதன் விளைவு. இரண்டாயிரம் வருடங்களாக இருந்து வந்த ஒரு கலைப்படைப்பு. அதன் கீழ் நான் சிறுவனாக இருந்தபோது போய் அமர்ந்து மாங்காய் அடித்து தின்றிருக்கிறோம். அப்போதெல்லாம் ஆட்டிடையர்கள் மட்டுமே வருவார்கள். அவர்களிடமிருந்து அது தப்பி அரசு கையில் மாட்டியது துரதிருஷ்டமே.

இதை சென்ற சில வருடங்களாக தமிழகம் முழுக்க கண்டு வருகிறேன். இப்படி சிற்பங்கள் சீரழிக்கபப்ட்ட இன்னொரு ஆலயம் கும்பகோணம் கோதண்டபாணிஸ்வாமி ஆலயம். போகும் இடங்களிலெல்லாம் முக்கியமான சிற்பங்கள் எந்தவிதமான குற்ற உணர்வும் இல்லாமல் நாசம் செய்யப்பட்டிருப்பதையே காண்கிறேன். சிற்பங்களின் வதைக்கூடம் போல் இருக்கின்றன நம் கோயில்கள்.ஆயிரம் வருடங்களாக நம் முன்னோர் பேணி நமக்களித்த சிற்பங்களை சுரண்டி மொத்தையான பிண்டங்களாக மாற்றி நம் வாரிசுகளுக்கு அளித்துக் கொண்டிருக்கிறோம்.

ஏற்கனவே இங்கே ஒரு பேரழிவு நடந்து கொண்டிருந்தது. கற்சிற்பங்கள் மீது வெள்ளையடிப்பது. எத்தனையோ நூற்றாண்டுகளாக நம்மிடம் அப்படி ஒரு வழக்கமே இருந்தது இல்லை. இருபது வருடங்களுக்குள் தொடங்கிய முறை அது. ஆழ்வார்திருநகரி போன்ற கோயில்களில் சிற்பங்கள் வருடம்தோறும் வெள்ளையடிக்கபப்ட்டு சுண்ணாம்புப் பிண்டங்களாக நிற்பதைக் காணலாம். சென்ற ஆட்சியின்போது கற்சிற்பங்கள் மீது ஏஷியன் பெயின்ட் அடிக்கபப்ட்டது. சிலநாட்களுக்கு முன்னர் குமரிமாவட்டம் குமாரகோயிலில் சிலைகள் மீது டிஸ்டெம்பர் அடிப்பதைக் கண்டேன்.

இதைப்பற்றி பக்தர்கள் கவலைப்படுவதில்லை. அவர்கள் கோயிலுக்குள் குப்பைகளை குவித்துப்போட்டு சிலைகள் மீது விபூதிகுங்குமத்தையும்

எண்ணையையும் அப்பிவிட்டு போகும் மனநிலை கொண்டவர்கள். மதுரை கோயிலின் மகத்தான வீரபத்ரர் சிலைகள் மீது வெண்ணையை வீசினால் ஏதோ பரிகாரம் என்று  பத்துப்பதினைந்து வருடங்கள் முன்னால் யாரோ கிளப்பி விட்டனர். முன்பெல்லாம் நான் பல மணிநேரம் மெய்மறந்து பார்த்திருந்த அச்சிலைகள் இன்று அழுகி நாறும் வெண்ணெய் அப்பிய பிண்டங்களாக நிற்கின்றன. ஒவ்வொருநாளும் இரவில் சிலர் அச்சிலைகள் மீது ஏறி நின்று கத்தியால் அப்பியிருக்கும் வெண்ணையை வழிக்கிறார்கள். அதையே மறுநாள் விற்கிறார்கள். அச்சிலைகள் இனி தமிழ்க்கலை வரலாற்றில் இல்லை என்று முடிவுகட்ட வேண்டியதுதான்.

காஞ்சீபுரம் தேவராஜ ஸ்வாமி ஆலயத்திற்குள் நுழையும்போது இடப்பக்கம் வரும் பெரிய மண்டபம் ஒரு அற்புதமான கலைக்கூடம். ஒவ்வொரு தூணையும் நின்று ஒரு மணிநேரம் நோக்கலாம். சமீபத்தில் ஒரு வெளிநாட்டு நண்பரை கூட்டிக் கொண்டு அங்கே சென்றேன். மண்டபம் முழுக்க மூங்கில்கள் ஓலைகள் மற்றும் உடைந்த மரச்சட்டங்களை குவித்து வைத்திருக்கிறார்கள். அவற்றை சிற்பங்களுடன் கயிறுபோட்டு கட்டி வைத்திருக்கிறார்கள்.

இன்று எந்தவிதமான பொறுப்பும் இல்லாமல் தமிழின் மகத்தான கலைச்செல்வங்கள் அழிய விடப்பட்டிருக்கின்றன.தமிழ்நாட்டில் எந்த கலை விமரிசகரும் இதழாளரும் இவற்றைப்பற்றி எல்லாம் எழுதி நான் வாசித்ததில்லை. அவர்கள் மீண்டும் மீண்டும் மேலைநாட்டு ஓவியங்களைப் பற்றி எழுதுகிறார்கள். உள்ளூர் ஓவியர்களின் முயற்சிகளைப்பற்றி புரியாத வரிகளை உருவாக்குகிறார்கள்.

நான் என் இளமையில் அலைந்து திரிந்து ரசித்த சிற்பங்களில் கணிசமானவற்றை இன்று போனால் பார்க்க முடியாது என்பதே நிலை. ஆனால் நாள் தவறாமல் இதழ்களில் கும்பாபிஷேகச் செய்திகள். புதுப்புது ஆலயங்களைப்பற்றிய சோதிடக்குறிப்புகள். ஏராளமான பக்தி இதழ்கள்.

தமிழகத்துக்கு அதன் மன்னர்கள் அளித்துப்போன செல்வங்கள் என்றால் ஏரிகளும் கோயில்களும்தான். அவற்றின் விலைமதிப்பை இன்றைய சூழலில் கணக்கிடவே முடியாது. அவை இரண்டும் ஒருவிதமான கொலைவெறியுடன் அழிக்கப்படுகின்றன இன்று. கேட்க எவருமே இல்லை.

## (8) மணல்வீச்சு

தமிழகத்தில் புனருத்தாரணம் என்ற பேரில் பழமை வாய்ந்த கோயில்களில் மணல் வீச்சு முறைப் படி சிற்பங்களை 'சுத்தம் செய்'கிறது அரசு. விளைவாக அரிய சிற்பங்கள் சிதைந்து மூளியாகி விடுகின்றன. தமிழகத்தின் மகத்தான சிற்பங்களில் கணிசமானவை ஏற்கனவே மூளியாக்கப் பட்டு விட்டன.

மணல் வீச்சு முறை என்பது சிற்பங்களைச் சுத்தம் செய்வதற்குரிய வழியே அல்ல. கப்பல்களின் அடியில் உள்ள சிப்பி, பவளக் கசடுகளை நீக்குவதற்காக உருவாக்கப் பட்டது. அதை வைத்து சிற்பங்களை சுரண்டலாம் என்று ஏதோ சும்பனுக்கு தமிழகத்தில் ஞானோதயம் வந்தது. மொத்த கோயில்களையும் அழிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

இதைப்பற்றி நெடுங்காலமாக எழுதி வந்திருக்கிறேன். இப்போது சில நண்பர்கள் சட்டபூர்வமாக அதை தடுக்கும் நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

நண்பர் ரீச் சந்திரசேகரன் எழுதிய கடிதம்

அன்புள்ள அன்பர் ஜெயமோகனுக்கு,
தாங்கள் எழுதி வரும் வரலாறு, பாரம்பரியம் பற்றிய பல கட்டுரைகளை நான் தொடர்ந்து படித்து வருகிறேன். Sand blasting தடை செய்யப் பட்ட ஒன்று. மத்திய தொல்லியல் துறையோ, மாநில தொல்லியல் துறையோ அவற்றை நிறுத்தி பல ஆண்டுகள் ஆகி விட்டன. ஆயினும் இந்து (?) அற(?) நிலையத் துறையினர் தான் இத்தகைய தடை செய்யப் பட்ட செயல்களைத் தொடர்கிறார்கள். பாரம்பரியச் சின்னங்களை எப்படிச் சுத்தம் செய்ய வேண்டும் என்ற பால பாடம் கூடத் தெரியாத நபர்களை (காண்டிராக்டர்களை) வைத்து இப்பணிகள் காசை சுருட்டவே நடை பெறுகிறது.

இதை எதிர்த்து ஒரு குரல் எழுப்பும் தன்னார்வ நிறுவனம் எங்களுடையது. கிராம மக்களுக்கு, நம் பாரம்பரியச் சின்னங்களைப் பற்றி எடுத்துரைத்து, பல கோயில்களைச் சுண்ணாம்பு, கல் போன்ற பழமை மிக்க பொருட்களை வைத்தே புனரமைப்பு செய்யும் குழு நாங்கள். சிமெண்ட், அக்ரிலிக்

பெயிண்ட் போன்றவை எங்களிடையே தடை செய்யப் பட்ட பொருட்கள். இதற்காகச் சட்ட ரீதியான புகாரை கோர்ட்டில் சமர்பிக்க நல்ல வழக்குறைஞர் தெரிந்தால் சொல்லவும்.

ஆயிரம் சான்றுகள் – இந்து அற நிலையத் துறையினர் செய்யும் கோயில் புனரமைப்பு என்ற அடாவடிகளை, பழங்காலச்சின்னச் சிதைவுகளை படங்களாகவும், வீடியோக்களாகவும் காட்டத் தயார்.

அன்பன்

'ரீச்' சந்திரசேகரன்.

To save culture & heritage visit:

www.conserveheritage.org

http://templesrevival.blogspot.com

http://reachhistory.blogspot.com

join http://groups/yahoo.com/temple_cleaners

மணல் வீச்சு முறை நீதிமன்றத்தாலேயே தடைசெய்யப் பட்டிருக்கிறது. அதற்கான சான்றுகளும் இந்த அமைப்பு கைவசம் வைத்திருக்கிறது. பார்க்க http://maraboorjc.blogspot.com/2011/04/sand-blasting.html

இந்த அமைப்பின் தொடர் நடவடிக்கைகளில் நண்பர்கள் பங்கெடுக்கவேண்டுமென விரும்புகிறேன்

## (9) ஆத்திகர்கள் என்னும் பிழைப்புவாதிகள்

வணக்கம் ஜெயமோகன்!

அருண் நரசிம்மனின் இந்த பதிவை படித்ததில் இருந்து யோசிக்கிறேன் என்னவாகத்தான் இருக்கும் நம் மக்களின் மனநிலை என்று.குதிரைக்கு சேணம் கட்டின மாதிரி ஒரே வியாபார சிந்தனை-இல்லை கேளிக்கை உணர்வு மட்டும்தான் போலிருக்கு…

-மாயன் (www.ahamumpuramum.blogspot.in)

அன்புள்ள மாயன்,

சில நாட்களுக்கு முன் கமல்ஹாசனிடம் பேசிக்கொண்டிருந்தேன். பேச்சுநடுவே அவர் சொன்னார். 'முக்கியமான கோயில்களிலே எல்லாம் ஒருத்தராவது நின்னு சிற்பங்களை பாக்கிறாங்களான்னு பாப்பேன். பாத்திரக்கூடாதேன்னு நினைக்கிறமாதிரி உள்ள ஓடுறாங்க'

சிற்பங்களைப் பார்க்கவேண்டும் என்பதற்காகவே பிராகாரங்களை வலம் வரவேண்டும் என்றும், பிராகாரத்தில் மூன்று வெவ்வேறு இடங்களில் அமர்ந்து செல்லவேண்டும் என்றும் மரபு வலியுறுத்துகிறது. வலம்வரும்போது கண்களை மூடிக்கொண்டும் பேசிக்கொண்டும் செல்கிறார்கள். அமர்ந்திருக்கும்போது பெரும்பாலும் சண்டை.

ஆம், அருண் நரசிம்மன் சொல்வது உண்மை. தமிழகத்தில் நாத்திகர்களுக்கு இருக்கும் குறைந்தபட்ச ஆன்மீகம் ஆத்திகர்களிடமில்லை. ஆத்திகர்களை கவனியுங்கள், அனேகமாக அனைவருமே வடிகட்டின சுயநலவாதிகள், லௌகீகவாதிகள், பிழைப்புவாதிகள். தங்கள் அன்றாட வாழ்க்கை சம்பந்தமான தேவைகள் நிறைவேறுவதற்கு பிரார்த்தனையும் வேண்டுகோளும் வைப்பதற்காகவே அவர்கள் கோயில்களுக்கு வருகிறார்கள். எந்தப் பொதுவிஷயத்திலும் ஆர்வமற்றவர்கள். பிறரைப்பற்றி ஒரு கணமேனும் நினையாதவர்கள்.

ஆன்மீகமென்பது உலகை, பிரபஞ்சத்தை முழுமையாக நோக்கும் ஒரு பார்வை. அதன் பகுதியாக அனைத்தையும் அணுகும் மனப்பக்குவம். அதன்

விளைவான கருணை, அன்பு, நீதியுணர்வு. இந்த அற்பர்களிடம் அந்தப்பண்பை என்றாவது கண்டிருக்கிறோமா என்ன?

ஆகவேதான் காந்தி காலத்தில் இருந்து இந்தியாவில் மிக அழுக்கான குப்பையான இடமாக நம் கோயில்கள் உள்ளன. எந்தச்சுரணையும் இல்லாமல் எதையும் எங்கும் வீசுவார்கள். திருச்செந்தூர் பழனி போன்ற ஆலயங்களில் கோயில் வளாகத்திலேயே மலம் கிடப்பதை கண்டிருக்கிறேன். ஆணவ-கன்ம-மாயா மலமறுப்பதுடன் உடல் மலத்தையும் அறுக்கிறார்கள் போல.

நாத்திகர்களிலும் வெறும் சத்தங்கள் உண்டு. ஆனால் அவர்களில் கணிசமானவர்கள் எதையோ கற்று தங்கள் சுயதேர்வாக நாத்திகத்தை ஏற்றவர்கள். ஆகவே சற்றேனும் வாசிப்போ பொதுச்சமூக உணர்வோ உடையவர்கள். அந்த பிரக்ஞை அவர்களிடம் இருக்கும். நமது ஆத்திகர்களின் இழிந்த மொண்ணைத்தனம் அவர்களிடம் இருக்காது.

கேரளத்தின் ஆலயங்கள் சுத்தமாக இருப்பதற்கான காரணம் கம்யூனிஸ்டுகள் கோயிலுக்குச் செல்வதுதான் என்று ஒருமுறை எம்.கோவிந்தன் சொன்னார். நகைச்சுவையாக சொல்லப்பட்டாலும் அது உண்மை. கோயில்களை கேரளப்பண்பாட்டின் பெருமை மிக்க கூறாக நாத்திகர்கள் எண்ணியதன் விளைவே அங்குள்ள கோயில்கள் காக்கப்பட்டமை. கலையுணர்வும் பண்பாட்டுணர்வும் இறைமறுப்புக்கு முரணாக அமையவேண்டியதில்லை என விளக்கிய ஈ.எம்.எஸ். அதற்குக் காரணம்.

இங்கே நம்மூர் ஆத்திகர்களிடமிருந்து நம் ஆலயங்களை காக்கவேண்டியிருக்கிறது. திருப்பணி என்ற பேரில் சிற்பங்கள் மேல் ஆசியன் பெயிண்டை பூசுகிறார்கள். மணலை வீசி மொண்ணையாக்குகிறார்கள். சிமிண்ட் கட்டடங்களைக் கட்டி கல்மண்டபங்களை சரிக்கிறார்கள். மலிவான மார்பிளையும் கக்கூஸ் டைல்ஸ்களையும் தரையில் ஒட்டி ஆலயங்களை அழுக்குக் குவியல்களாக ஆக்குகிறார்கள். தகரக்கொட்டகைகளையும் இரும்புத்தூண்களையும் சிற்பங்களைத் துளைத்து நிறுவுகிறார்கள்.

அடிப்படை அறவுணர்ச்சியும் கலைநுண்ணுணர்வும் கொண்ட நாத்திகர்கள் தமிழகத்திலும் உண்டு. தமிழகத்தில் சூழியலை, வனத்தை காக்க

குரல்கொடுப்பபவர்கள் பெரும்பாலும் நாத்திகர்களே. அவர்களுக்கு ஒரு வேண்டுகோள். இந்த ஆத்திகப்பதர்களிடமிருந்து ஆலயங்களைக் காப்பாற்றுங்கள். அவை கடவுள் வாழும் இடங்களாக நீங்கள் நினையாமலிருக்கலாம். அனால் நீங்கள் பண்பாடு என்றும் வரலாறு என்றும் கலை என்றும் எதையெல்லாம் நினைக்கிறீர்களோ அவை திகழும் மையங்கள் அவை. உங்களுக்கும் உரிமையானவை. அவற்றை இந்த உலகியல் வெறிகொண்ட மூடர்கள் அழிப்பதை நீங்கள் அனுமதிப்பீர்கள் என்றால் உங்கள் சந்ததிகள் உங்களை சபிப்பார்கள்.

# (10) ஆலயம் தொழுதல்

தமிழ்நாடு ஆஸ்திக மண்டலி மற்றும் இருபத்தேழு [ஏழும் இரண்டும் ஒன்பது] துணை அமைப்புகள் சார்பில் வெளியிடப்பட்ட 'ஆலயவழிபாடு, அருமையும் பெருமையும் வழிமுறைகளும் சடங்காசாரங்களும் இன்னபிறவும்' என்ற தலைப்பில் அமைந்த சின்னஞ்சிறு பிரசுரம் ஆத்திகர்களுக்கு மிகமிக உதவிகரமானதாகையால் அதை இங்கே அளிக்கிறோம். சுருக்கமாக. ஆத்திகத்துக்குரிய அடாசு மொழி சற்றே நவீனப்படுத்தப்பட்டிருப்பதை ஆத்திக அன்பர்கள் மனமுவந்து மன்னிக்கவேண்டும்.

ஆலயம் என்பது இந்துப்பண்பாட்டின் அடிப்படையான அமைப்பாகும். ஆ+லயம் என்ற சொல்லாடியே ஆலயமானது என்று புராணகதாசாகரம் லட்சுமிகிருஷ்ணமாச்சாரியாரவர்கள் குறிப்பிட்டிருப்பதை இங்கே எடுத்துரைக்கிறோம். ஆ என்று வாய்திறந்து லயித்து நிற்பதற்குரிய இடமென பொருள்படும் . இ·து. கோவில் என்றும் சொல்வதுண்டு. கோவில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்று அறிவுரை உள்ளதல்லவா? "go with will என்ற ஆங்கிலச் சொல்லாட்சியே அப்படி மருவிற்றென்று சிவநெறிக்காவலர் சிவ.வல.குழ.அருணாச்சலம் செட்டியார் அவர்கள் ஒருரையில் குறிப்பிட்டார்கள்.

ஆகவே ஆலயம் தொழுவது சாலவும் நன்று. நன்றே செய்க அதுவும் இன்றே செய்க. தீதும் நன்றும் பிறர்தர வாரா. நன்றுக்கும் தீதுக்கும் அ·தே துணை. [நினைவுக்கு வரும் இன்னவையன்ன பிற சொல்லாட்சிகளைச் சேர்த்துக்கொள்க. ஆசிரியர் குழு] ஆலயத்துக்குச் செல்லும்போது செய்யவேண்டிய சமயக்குறிப்புகளை இனி கானலாம்.

குளித்து கும்பிடுதல் நமது மரபு. ஆலயம் சென்று அங்குள்ள திருக்குளத்தில் நீராடி நீறோ மண்ணோ அணிந்து கைகூப்பி பக்தி மேலிட இறைநாமங்களைச் சொல்லியபடி ஆலயம்புகுதல் முறை. சுகாதாரம் கருதி ஆலயக்குளத்தில் நீராடுவதை தவிர்க்கலாமென்பது ஆஸ்திகமண்டலியின் கருத்து. ஆயினும் முறைவழுவலாகாது என்பதனால் வெளியே ரூ.இருபதுக்கு விற்கப்படும் குடிநீர்குப்பி ஒன்றைவாங்கிக் கொண்டு உள்ளே சென்று ஆலயக்குளத்தில் மெல்லமெல்ல வழுக்காமல் காலெடுத்து வைத்து இறங்கி கால்நகங்களைமட்டும் நனைத்து அக்கணமே மேலேறி குடிநீர் குப்பி திறந்து நல்லநீரால் கால்களை கழுவிக்கொள்ளவும்.அவ்வாறு கழுவாமல்

கோயிலுக்குள் செல்லக்கூடாது என்பதையே 'அசுத்தம்செய்யாதீர்' என்று ஆலய நிர்வாகிகள் அங்கே எழுதிவைத்திருக்கிறார்கள்.

ஆயினும் நம் சடங்குகளைக் கைவிடலாகாது. ஆங்கே பெரிய சாக்குப்பைகளில் வைத்து விற்கப்படும் பொரி சிலநாழி வாங்கி ஆலயக்குளத்தில் பக்தியுடன் கொட்ட வேண்டும். குளத்து மீன்கள் பலவருடம் முன்னரே இறந்துவிட்டிருக்குமென்றாலும் அவற்றின் ஆவிகளுக்கு நாம் தர்ப்பணம் செய்தாக வேண்டியிருக்கிறது. கைவசம் கொண்டுவந்த வீட்டிலுள்ள பழைய பூசனைப்பொருட்களான வாடிய மாலைகள் காகிதப்பூக்கள் எலிப்புழுக்கை கலந்த மிஞ்சிய பொரிசுண்டல்கள் இன்னபிறவற்றையும் ஆலயக்குளத்தில் வீசலாம்.

அதன்பின்னர் நாம் ஆலயமுகப்புக்குள் செல்கிறோம். இங்கே கருங்கல் தரையில் பலவகையான மாந்தர் கால்களை நீட்டியும், குந்தியும், குடும்பமாகவும், குடும்பங்களை வெறித்துப் பார்க்கும் தனியர்களாகவும், பல கோணங்களில் நிரம்பி அமர்ந்திருக்கக் காணலாம். இவர்கள் நடுவே குழந்தைகள் வாழைப்பழம், தேங்காய், பொங்கல், சுண்டல் முதலியவற்றை தின்றும் அள்ளி இறைத்தும் மலசலம் கழித்தும் களித்து விளையாடுகின்றதைப் பார்க்கலாம். இங்குள்ள பெண்கள் சரம்சரமாக பூச்சூடி உரக்கப்பேசி 'ய்யக்காவ்' என்று அகவி பிறரை அழைத்து தத்தம் இருப்பை நிறுவிக்கொண்டிருப்பார்கள்.இவர்களினூடாக ஐம்புலன்களையும் குவித்து நடந்து உள்ளே செல்வதென்பது ஒரு வகை தியானமாகும்.

நுழையும்போதுள்ள மண்டபங்களில் பெரிய தூண்களில் ஏராளமான கருங்கற்சிலைகள் பல அடி உயரத்துக்கு நிமிர்ந்து நிற்பதைக் காணலாம். யாளிகளின் குறிகளை பார்க்கும் இளம்பெண்கள் கிளுகிளுத்து சிரித்து தோழிகளை கிள்ளுவதில் தவறில்லையென்றாலும் குலமாதர் தத்தம் கணவர்களை அழுத்தமாக கிள்ளியோ நகம் இல்லாவிட்டால் ஊசியால் குத்தியோ கவன ஈர்ப்பு செய்து பளபளக்கும் உருண்டைமுலைகளில் இருந்து மீட்டு உள்ளே கொண்டுசெல்லும்படிக் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். அப்படி இருந்தும் கையெட்டும் உயரத்துச் சிலைகளில் முலைகள் தனி வழவழப்புடன் இருப்பதை ஆராய்ந்த மாதல்ல நாராயணையா கமிட்டி அவற்றில் இடமுலைகள் மேலும் எண்ணைப்பிசுக்குடனிருப்பதை அடிப்படையாகக் கொண்டு பெரும்பாலான தமிழர்கள் வலதுகையர்கள் என்ற முதற்கட்ட முடிவுக்கு வந்திருக்கிறது.

இப்பகுதியின் தூணிடுக்குகளுக்கும் சிற்ப இடைவெளிகளுக்கும் பலவகை பயன்கள் உண்டு. கோயில்பணியாளர்களின் செருப்புகள் மஞ்சள்பைகள் போன்றவற்றை இறுக்கி வைத்துவிட்டு போவதற்கும் வெற்றிலை எச்சில் துப்புவதற்கும் பிரசாதப்பொட்டலங்களைப் போடுவதற்கும் அவற்றைப் பயன்படுத்தலாம். தாம்பூலப்பழக்கம் உள்ளவர்கள் சற்று கவனித்தால் எந்தச்சிலைமீது சுண்ணாம்பு தடவுதல் அங்கே மரபென்பதை அறிந்துகொள்ளலாம்.

கொடிமரத்தை அணுகியதுமே ஆண்கள் கரசரணங்களை அங்குள்ள புழுதித்தரையில் அழுந்தப்பதித்து விழுந்து கும்பிடுதல் நன்று. பெண்கள் முழந்தாளிடலாம். குண்டு மாமிகள் முழந்தாளிடுவது எப்படி என்று தனி கைப்பிரசுரம் எங்களிடம் கிடைக்கும். சில எளிய செய்முறைகள் இதோ. முதலில் மெல்ல சரிந்து இடக்கையை தரையில் ஊன்றவும். அதன் பின் இடது காலை மெல்ல மடித்து பகவானே என்ற கூக்குரலுடன் மெல்லமெல்லச் சரிந்து அதன்பின் வலக்காலையும் மடிக்கவும். பின்பு இரு கைகளையும் தரையில் ஊன்றி தலையை நிலம் சேர்த்து வணங்கும்போது பின்னல் தரையில் வீழ்ந்து பிறரால் மிதிபடாமலிருக்கவும் நந்தியென எண்ணி பிறபக்தர் காதில் குறைகள் சொல்ல வராமலிருக்கவும் கவனம் கொள்ளவும். எழுந்திருப்பது எப்படியானாலும் உங்கள் கையில் இல்லை, காலிலும். கூடவே வலுவான துணை கொண்டு செல்லவும்.

கொடிமரத்தில் இருந்து வலம் வந்து ஆலயபிராகாரத்தை சுற்றிவரல் வேண்டும். மருமகளையும் பக்கத்து வீட்டுக்காரியையும் வைவது, பிறபெண்டிர் நகைகளை நோக்கி நொடிப்பது, சீரியல் விவாதம் போன்றவை இத்தருணத்தில் உகந்தவை. இளம்பெண்கள் தலையையும் கைகளையும் பலமாக ஆட்டி ஆனால் குரல் எழாமல் பேசிக்கொண்டு செல்லலாம். ஆண்கள் செல்போனை காதில் ஒட்டிவைத்து "ஆ? ஆ? அப்டியா? ஆ? ஏ? ஓ! அதுசரி ! அஹ்ஹஹ்ஹா!!!" என்று கூவியபடி சுற்றிவரலாம். நடுவே கல்மேடாக எதைக் கண்டாலும் கவனம் நில்லாமலேயே கன்னத்தில் போட்டு கும்பிட்டுச் செல்லவேண்டும், சற்று பழகினால் தண்டுவடமே இதைச்செய்ய ஆரம்பித்துவிடும்.

சிவன் கோயிலில் இடப்பக்கம் சண்டிகேஸ்வரர் சன்னிதி கோயில் கருவறைச்சுவரை நோக்கி நெருக்கமாக இருக்கும். உள்ளேசெல்லும்போது ஆப்புபோல அவ்விடைவெளியில் சிக்கிக்கொள்ள வாய்ப்பிருக்கும்

என்பதனால் எடையர்கள் நின்றுவிடுதல் நன்று. சண்டிகேஸ்வரரை கைதட்டிக் கும்பிடுதல் வேண்டும்–நம்முடைய கையை. அது ஆட்டோ ரிக்ஷாவைக் கூப்பிடுதலாகவும் அமையலாகாது.பொதுக்கூட்டத்தில் தட்டுவதாகவும் அமையலாகாது.நடுவாந்தரமாக மென்மையாக அமையலாம். மிக்சர் பொரி சாப்பிட்டுவிட்டு கைகளை தட்டுவது போல.

அர்த்தமண்டபத்தில் பல வகையான சிலைகள். அவை ஒவ்வொன்றுக்கும் அவற்றுக்கான நோக்கம் உண்டு. சில சிலைகளின் மீது மிஞ்சிய குங்குமம் விபூதியை நாம் போடவேண்டும். சில சிலைகள் மீது வேட்டி, புடவை நுனிகளை பிய்த்து நூலைப்போட வேண்டும். சில சிலகளைப் பிடித்துக்கொண்டு எம்பி கருவறையைப் பார்க்கலாம். சிலசிலைகள் மீது நாம் கொண்டுபோகும் சிறு பைகளை தொங்கவிடலாம். அவற்றுக்கான அடையாளங்கள் அச்சிலைகள் இருப்பதை அவதானித்து அவற்றைச் செய்தல் நலம். புதுவேட்டி, புதுப்புடவை என்பதற்காக உள்ளாடைகளை வெளியே எடுத்து நூல் பிய்ப்பது மாண்பல்ல.

கோயில்கருவறைக்கு இருபக்கமும் இரு பெரும் சிலைகளைக் காணலாம். இவை துவாரபாலகர்கள் என்று சொல்லப்படுகின்றன. 'ஒருரூபாய்' என்று ஒரு சிலையும் 'உள்ளே கொடுங்கள்' என்று இன்னொரு சிலையும் கைகாட்டி மிரட்டி உறுத்து நோக்கி நம்மிடம் சொல்கின்றன. உள்ளே அர்ச்சகர்கள் இருபபர்கள். இவர்கள் கட்டுக்குடுமியை தளர்வாக கட்டி தோளில் தவிட்டுநிறத்தில் அல்லது கருப்பு நிறத்தில் ஒரு நூல் அணிந்திருப்பார்கள். இவர்களை நூல்கள் நூலோர் என்று சொல்கையில் அவர்கள் தங்களை மேலோர் என்று சொல்லிக்கொள்கிறார்கள். பத்துநாள் தாடி, காவிப்பல், கைதூக்கி அக்குள் சொறியும் பழக்கம், உடம்பெங்கும் தேமல் போன்றவை இவர்களின் தோற்ற இலக்கணங்கள்.சிவாச்சாரியார்களுக்கு பூச்சுத்தேமலும் பட்டர்களுக்கு பட்டைத்தேமலும் காணப்படும்.

கருவறைக்கு நேரெதிராக இருபக்கமும் இரு எவர்சில்வர் குழாய்கள் மாட்டப்பட்டு இடம் பிரிக்கப்பட்டிருக்கும். இறைச்சன்னிதி முன் பெண்டிரின் கற்பு காப்பாற்றவேண்டுமென்பதே நோக்கம். பெண்டிரை ஆண்கள் நேர்நின்று நோக்கும் வசதிக்கெனவும் ஆகமக்குறிப்பு உண்டு. கருவறைக்குள் இருட்டு நிறைந்திருக்கும். சிவாலயங்களில் தாழ்வான சிவலிங்கம் காணப்படும். அதனைச் சுற்றி வெள்ளியாலான வட்டம் அமைந்திருக்கும். இருபக்கமும் விளக்குகள் தொங்கி ஆடும். வைணவ

ஆலயங்களில் கரியசிலைகள் நின்றோ படுத்தோ இருக்கையில் முன்னால் வெண்கலச்சிலைகள் அலங்காரங்களுடன் இருக்கும். அவையே கும்பிடுவதற்குரியவை. அவற்றைப்பற்றிய விவரணைகளுக்குள் செல்ல இங்கே இடமில்லை.

கருவறைக்குள் புகுதல் ஆகமமுறைப்படி வகுக்கப்பட்டுள்ளது. நூலோர் தவிர எலி, கரப்பாம்பூச்சி, பாம்பு, பல்லி, பூரான் போன்றவை உள்ளே அனுமதிக்கப்படலாம் எனினும் பெருச்சாளியே முதன்மையானது. பறப்பனவற்றில் வௌவாலுக்கு முதலிடம். இறை வழிபாட்டை மனமொன்றி செய்தல்வேண்டும். சாமிமீது கரப்பாம்பூச்சி ஊர்ந்து ஏறும்போது அங்கே கவனம் திரும்புதல் கூடாது. ”அம்மா சாமி மேலே கரப்பாம்பூச்சி…அம்மா பாத்தியா சாமி மேலே கரப்பாம்பூச்சி…அம்மா”என்று கத்தி நம் புடவையைபிடித்திழுக்கும் சிறு குழந்தைகளை மண்டையில் குட்டி அழச்செய்து வாயடைய வைக்க ஆகம அனுமதி உண்டு.

பொதுவாகவே குழந்தைகளை ஆலயங்களில் கண்டிப்பாக கட்டுப்படுத்தியிருக்க வேண்டும். தடுப்புக் கம்பிகளில் ஏறி விளையாடுதல், சக குழந்தைகளை நோக்கி உதடுகளைக் கோட்டிக் காட்டுதல், கையில் உள்ள பொருட்களை உண்டியல் துளையில் போடுதல், நந்தியை அடையாளம் தெரியாமல் ”பண்ணி பாத்தியா ப்ப்பபண்ணி படுத்திருக்கு ” என்று சொல்லி சுட்டிக்காட்டுதல் போன்றவை மன்னிக்கப்படலாமென்றாலும் சயனப்பெருமாளை நோக்கி ”சாமிக்கு ஜொரமா? படுத்தே கெடக்கு?” என்றும், நடராசரைப்பார்த்து ”இந்த சாமிக்கு காலிலே முள்ளு குத்திச்சு ..பாவம்” என்றும் சொல்லும் குழந்தைகள் ஆகமவிதிகளை மீறுகின்றன என்று உணரல் வேண்டும். குழந்தைகளை கட்டுப்படுத்த செவி என்ற உறுப்பை உருவாக்கிய வாஸ்துதேவனை நாம் இங்கே நினைவில் கொண்டு வழுத்துவோமாக.

அர்ச்சகர் ஒரு பெரிய தட்டில் கற்பூரச்சுடர், பூக்கள் போன்றவற்றுடன் வருவதைக் கண்டு உடலில் உள்ள எல்லா சட்டைப்பைகளுக்குள்ளும் கையை விட்டு துழாவ ஆரம்பித்தல் பிழை. கோடுபோட்ட அண்டர்வேரை வெளியே எடுத்து பணம் எடுப்பது பாவம். பெண்கள் முந்தானை விலக்கி ஜாக்கெட்டுக்குள் இருந்து எடுப்பதில் பிழையில்லை.

எனினும் முன்னரே சில்லறை மாற்றி வைத்தல் நன்று. போடுவது ஒருரூபாய்க்கு குறைவல்ல என்று உறுதிசெய்யவே அவர் அவ்விளக்கை

வைத்திருக்கிறார் என்றும் பேருந்து நடத்துனர் சீட்டு அளிப்பதுபோல மலர் அளிக்கிறார் என்றும் எண்ணற்க. பெருமாள் ஆலயங்களில் அளிக்கப்படும் துளசி தீர்த்தத்தை உதடுகளின் வைத்து உடனே எடுத்துவிடுதல் உடலாரோக்கியத்துக்கு நன்று. அமீபாசுரன் தூணிலும் துரும்பிலும் இருக்கும் மாயாவியென்க. கர்ப்பூரச்சுடரை தொட்டு கும்பிடும்போது அணைத்து வசைபெறல் உகந்ததல்ல.

இறை வழிபாட்டை மனமொன்றி செய்தல் வேண்டும்.ஆகவே கையில் உள்ள குப்பைகளை எங்குபோடுவதென்று அலைமோதலாகாது. அங்கேயே அபப்டியே போட்டுவிடுதல் நலம். அப்போது நினைவுக்கு வந்த பக்திப்பாடல்களை முன்னால் நிற்பவரின் செவி அதிரும்படி கதறுவது நெறியாகும். வரிகள் தெரியாதவர்கள் சிவசிவா என்றோ சம்போ மகாதேவா என்றோ நாராயணா பெருமாளே என்றோ கூப்பாடு போடலாம்.

கோயிலுக்கு நாம் என்ன செய்தாலும் அதை சாமி அறிந்து கொள்வதுடன் அவர் மறக்காமலும் இருக்க வேண்டும். ஆகவே நாம் அளிக்கும் பொருட்களில் நம் பெயரை குறித்து வைக்க வேண்டும். ஏழு ரூபாய் குண்டுபல்ப் வாங்கிக் கொடுத்தாலும் கூட 'பல்ப் சுப . வல. அருணாச்சலம் செட்டியார் வகையறா உபயம்' என்று எழுதி வைப்பது நல்லது. கோயிலை அத்தனை பெரிதாகக் கட்டிய பாண்டியர்களும் சோழர்களும் எழுதி வைக்காத காரணத்தால் எப்படி இருந்த இடம் தெரியாமல் போனார்கள் பார்த்தீர்கள் அல்லவா?

கருவறைக்கு முன் நாம் குடும்ப ஒற்றுமையை நிலைநாட்டவேண்டும். "மஞ்சூ அம்மா கையை புடிச்சுக்கோ...டேய் ராகவ், தண்டக்கருமாந்தரமே எங்க போற...ஏண்டி அவனை புடிச்சுக்கச் சொன்னா அங்க என்ன செய்து எழவெடுக்கிறே" என்று கூவி நிலைமையை நம் கட்டுக்குள் கொண்டுவரலாம். "வந்து தொலையேண்டி சனியனே"என்று மனைவியை அழைத்து அடுத்த சன்னிதிக்குச் செல்வது தொல் தமிழ் மரபு

மிஞ்சிய விபூதிகுங்குமத்தை சிலைமீது கொட்டிவிட்டு வெளியே செல்லும்போதே பேசி நிறுத்திய மிச்சத்தை தொடரலாம். வெளியே வெவ்வேறு இடங்களில் பலவகையான நூலோர் நின்று பலவகையான வழிபாடுகளைச் சொல்லி நம்மை ஈர்ப்பதைக் காணலாம். இவ்வாறு ஆலயங்களில் நாள்தோறும் புதுப்புது வழிபாட்டுமுறைகள் உருவாகி வருகின்றன. அவற்றை கணக்கிலெடுத்து ஆகமங்களை

திருத்தியமைப்பதறகாக கமிட்டி ஒன்று செயல்படுகிறது. சராசரியாக நாள்தோறும் பதினேழு புதிய சடங்குகள் உருவாகி வருகின்றன என்பது கணக்கு. சிலவற்றை ஈண்டு பட்டியலிடுவாம்

ஆஞ்சனேயருக்கு வடைமாலை சார்த்துதல். காகிதத்தில் ராமஜெயம் எழுதி மாலையாகக் கட்டி அவர் கழுத்திலணிவித்தல். ஜெராக்ஸ், பிரிண்ட்அவுட் போன்றவையும் ஆகலாம் என்றானபின் கோடிராமநாமம் வழக்கமாக உள்ளது. நாநூறுகோடி ராமநாமத்தை சூப்பர் கம்ப்யூட்டர் உதவியுடன் அச்செடுத்து சமர்ப்பிக்கும் ஒரு வேள்விகூட இப்போது நிகழ்ந்தது. நிறைய அனுமன்கள் தேவைபப்டுவதனால் சில இடங்களில் சுக்ரீவன், வாலி, அங்கதன் போன்ற சிலைகளுக்கும் இதேவழிபாடு செய்யப்படுகிறது.

காலபைரவன் காளி போன்ற சிலைகள் மீது வெண்ணையை 'பொச்சக்' என்று தூக்கி வீசுவது. அதே வெண்ணை வழித்தெடுக்கப்பட்டு மீண்டும் உருட்டி விற்கப்படுவதால் நாற்றம் குமட்டும் என்பதனால் கையில் வாங்கியதுமே சிலையை நோக்கி ஒடுவோர் முந்தையோர் இட்ட வெண்ணையில் வழுக்கி விழுதல் நிகழ்வதுண்டு. பெருமாள் சிலைகளுக்கு மேலே சந்தனத்தை வீசுவதும் பிள்ளையார் மீது நாணயங்களை வீசுவதும் காணப்படுகிறது. நெல்லைமாவட்டத்தில் ஒரு ஆலயத்தில் ஆனாய நாயனார் மீது செல்பேசியை வீசும் மரபு இருப்பதாகச் சொல்லபப்டுகிறது. ஆனால் குறிபார்ப்பதற்காக பலமுறை பொருட்களை சாமி முன்பு முன்னும் பின்னும் ஆட்டுவதும் ஒரு கண்ணைமூடிக்கொள்வதும் சம்பிரதாய விரோதமாகும்.

முஞ்சூறு சிலைகளுக்கு பூசை செய்து எலித்தொல்லை நீங்கப்பெறுதல். கோயில் சுவர்களில் உள்ள பல்லிசிலைகளுக்கு குங்குமம் சார்த்தி பூசை செய்தல். இதனால் பல்லிவிழுந்த தோஷம் நீங்கும் என்று புது ஐதீகம். ஒரு கோயிலில் தேள்கடித்த தோஷம் தீர அங்கே தேள்சிலைக்கு வெண்னைசாத்தும் வழக்கம் சூடுபிடித்தபோது ஆய்வுக்குழு சென்று நோக்கி அது தேளல்ல பத்து கை கொண்ட ராவணனே என்று நிறுவியபோது பக்தர்கள் கடும் எதிர்ப்பு தெரிவித்தமையால் அந்த நிரூபணம் கைவிடப்பட்டது.

மூலமூர்த்திக்கு அபிடேகம் செய்த எண்ணையை ஒரு குழியில் சேமித்து அந்த எண்ணையை அள்ளி நல்மருந்தென வணிகம்செய்தல். எண்ணைத்தேவை அதிகரிக்க அதிகரிக்க வடை மற்றும் அதிரசம் சுட்ட எண்ணையும் அதில்

கலக்கப்பட்டது. கன்னங்கரேலென இருப்பதனால் அதை குரூடாயில் என்று இந்திய எண்ணை சுத்திகரிப்பகத்துக்கு சிலர் செய்த புகார் தவறானது.

கோயில் கிணற்றில் சில்லறைகளை வீசுவது முறையென்றாலும் வீட்டிலெஞ்சிய செல்லாத சில்லறைகளை கொண்டுவந்து போடவேண்டிய இடமென அவ்விடத்தை எண்ணுதல் முறையன்று. பொதுவாக மூலச்சிலை அன்றி அத்தனை சிலைகளை நோக்கியும் சில்லரைகளை வீசியெறியலாம். திருப்பி நம்மை சாமி பணத்தால் அடிப்பார் என்பது ஆகம விதி. அதே மாதிரி சில்லறையால்தான் அடிக்கிறார், நோட்டைக் காணோமே என்றால் அது அவரவர் விதி.

செவிசாய்த்த நந்தியின் காதில் புருஷனைப்பற்றிய குறைகளைச் சொல்லலாம் என்பது சமீபத்திய கண்டுபிடிப்பு. ஒரு காதின் துளை வழியாக குச்சிவிட்டால் மறுகாதில் வெளிவரும் யாளியின் காதில் சொல்வது கணவனிடம் பேசும் இன்பத்தை சில பெண்டிருக்கு அளிப்பதனால் அதுவும் இப்போது மரபாகி வருகிறது. அந்த யாளி தன் வாய்க்குள் துப்பவோ விழுங்கவோ முடியாத கல்லுருளையுடன் நிற்குமென்றால் மேலும் விரும்பப்படுகிறது.

சிற்பக்கலையை ரசிப்பதற்கான எளியவழிகள் இப்போது அங்கீகாரம் பெற்றுள்ளன. தூண்களை சிறு கல்லால் தட்டிப்பார்த்து ஏழிசைக் கற்கள் என்று சொல்வது பல இடங்களில் உண்டென்றாலும் சில இடங்களில் நக்கிப்பார்த்து நவரசத்தூண்கள் என்று சொல்ல ஆரம்பித்திருப்பதை இன்னும் ஆகமக் கமிட்டி அங்கீகரிக்கவில்லை. பொதுவாக சிற்பங்களை கொட்டியும் தட்டியும் பார்த்து நல்ல ஓசை வரக்கூடிய சிற்பமெ சிறந்தது என்ற முடிவுக்கு வருதல் எளிய வழி.

இதைத்தவிர அர்ச்சனை சார்ந்த சில புதிய சடங்குகளும் உள்ளன. சிவலிங்கத்துக்கு அழுக்குத் துண்டால் இடைக்கச்சை கட்டி விடுதல், கல்லிலேயே அலங்கார உடையணிந்த அம்மனுக்கு அதற்குமேல் நாலரை ரூபாய் சீட்டிப்பாவாடையை எண்ணைபிசுக்குடன் கட்டிவிடுதல், கால்தூக்கி நின்றாடும் ஆடவல்லானுக்கு பஞ்சக்கச்சம் கட்டுதல், போர்கோலம் கொண்ட வீரபத்ரனுக்கு கோவணம் கட்டிவிடுதல் போன்றவை இப்போது பரவலாக கடைப்பிடிக்கப்படுகின்றன. திருவிடைநல்லூர் பக்கம் ஒரு கோயில்யானைக்கு ஜட்டி தைத்துபோட்டதாகவும் சொல்லப்படுகிறது. அவை ஆராயப்பட்டு முறைப்படி ஆகமங்களில் சேர்க்கப்படும்.

ஆகமம் என்பது மாறாத விதி அல்ல. இலக்கியம் கண்டதற்கே இலக்கணம் என்பதைப்போலவேதான் இதுவும். 'Ah! Come! Come! " என்ற சொல்லில் இருந்தே ஆகமம் வந்தது என்பதை தச்சநல்லூர் சங்கரநயினார் பிள்ளையவர்கள் ஒரு மேடையிலே அழகுற விளக்கினார் என்பதை இங்கே சுட்டிக்காட்டுகிறோம்.'நாலுபேருக்கு நல்லது செஞ்சா தப்பேயில்லை' என்று சைதாபேட்டை பாலகுமாரசுவாமிகள் அருளிச்செய்ததும் நினைக்கற்பாலது.

## (11) அசைவைக் கைப்பற்றுதல்

புலம்பெயர்ந்த ஈழ எழுத்தாளரான பொ.கருணாகரமூர்த்தி எனக்கு மிகவும் பிடித்தமான படைப்பாளிகளில் ஒருவர். நகைச்சுவை உணர்ச்சியுடன் நுண்அவதானிப்புகளை நிகழ்த்தி மானுட இயல்புகளை சித்தரிப்பவர். அவரது 'ஒரு கிண்டர்கார்ட்டன் குழந்தையின் கேள்விகள்' என்ற கதையில் ஒரு சின்னப்பெண் கேள்விமேல் கேள்விகளாகக் கேட்கும். நான்கு கைகள் கொண்ட சாமிச் சிலையைப்பார்த்து "சாமிக்குப்பின்னால் ஆரு நிக்கிறாங்க?"என்று ஐயப்படும். அது பெரும்பாலான குட்டிகள் கேட்கும் கேள்விதான்.

அந்த நூலுக்கு முன்னுரை எழுதிய 'புரட்சிக்' கவிஞர் இன்குலாப் அக்கதையை நகைச்சுவையாக பார்க்கவில்லை. ஒரு குழந்தை அபாரமாக பகுத்தறிவுக்கேள்விகளை எழுப்புவதை எண்ணி எண்ணி புளகாங்கிதம் அடைந்திருந்தார். எனக்கு வேடிக்கையாக இருந்தது. ஏன் நாம் சின்னச்சின்ன விஷயங்களைக்கூட உசாவி அறிய முயல்வதில்லை?

சின்னப்பிள்ளையாக இருந்தபோது சைதன்யா என் நாவலான விஷ்ணுபுரம் இரண்டாம் பதிப்பில் வந்த ஆயிரம் கைகள் கொண்ட மைத்ரேய புத்தரின் படத்தைக் கண்டு ஐயம் கொண்டு கண்களை மேலே செருகி ஆழமாகச் சிந்தனை செய்தபின் கேட்டாள் "எதுக்கு இவ்ளோ கை?" சாமி எப்படி படுக்கும் எப்படி குளிக்கும் போன்ற நூறாயிரம் ஐயங்கள் குட்டி மண்டைக்குள் முண்டியடித்தன.

நான் உடனே டியூப் லைட்டை அணைத்தேன். மீண்டும் போட்டேன். அது பக் பக் என்று துடிதுடித்து எரிய ஆரம்பிக்க நான் வேகமாக கைகளை ஆட்டினேன். "பாப்பா இங்கபார்...அப்பாவுக்கு எவ்ளோ கை!" சைதன்யா பிரமித்துப் போய்விட்டாள். "ஆமா..." என்றவள் தன் கையை பார்த்து "பாப்பாவோட கையி?" என்றாள். "நீயும் ஆட்டு"என்றேன். தனக்கு ஆயிரம் கை வந்த அற்புதத்தில் இரவெல்லாம் திளைத்தாள். அதன் பின் அந்த படத்தைப்பார்த்தால் "சாமி வேகேமா கைய ஆட்டுது" என்பாள்.

நம்முடைய சிற்பங்களில் உள்ள ஏராளமான கைகள் என்ற அம்சம் இப்படித்தான் உருவாகி வந்திருக்கிறது. பலநூறு கைகள் என்ற கருத்து பௌத்த மரபில் இருந்து வந்தது. புத்தர் மகாதர்ம காய வடிவில்

வழிபடப்படும்போது அவருக்கு பல்லாயிரம் கைகள் — சஹஸ்ர ஹஸ்த — என்று சொல்லப்படுகிறது. பௌத்த மரபின்படி எதுவுமே நிலை வடிவில் இல்லை. நெருப்பின் சுடருக்கும் மலைக்கும் வேறுபாடு இல்லை, மலை கொஞ்சம் மெல்ல நிகழ்கிறது அவ்வளவுதான்

ஆகவே புத்தரை ஒரு நிலைத்த வடிவமாக அவர்கள் காணவில்லை. ஒரு நிகழ்வாக, நிகழ்வின் ஒரு கணமாக, கண்டார்கள். பிரபஞ்சத்தை நிகழ்த்தும் பிரபஞ்ச ரூபனாகிய தர்மகாய புத்தரைப் பார்த்தால் எப்படி இருப்பார்? மின்னலின் கணத்தில் அவரைக் கண்டது போலிருக்கும். மின்னல் ஒளியில் அதிவேகமாக அசையும் ஒன்றைக் கண்டால் எப்படி இருக்கும்? அதுவே சஹஸ்ர ஹஸ்த புத்தரின் சிற்பம். அங்கிருந்துதான் நம் சிற்பக்கலையில் பல கைகள் என்ற கருத்து வேரூன்றியது.

நடராஜர் சிலை இன்னொரு உதாரணம். உக்கிரமான ஒரு சலனத்தின் ஒரு கணத்தோற்றம்தான் அச்சிலை. சடைமுடிகள் பறக்கின்றன. ஆடை பறக்கிறது. கால் தூக்கிச் சுழலும் சுழற்சியின் ஒரு கணம் அது. அந்நிலையில் நான்கு கைகளும் அந்த அதிவேக அசைவாலேயே பொருள்படுத்தப்படுகின்றன.

பின்னர் பல கைகள் பலவகைச் செயல்பாட்டின் குறியீடுகள் ஆக மாறின. பல வகையான ஆயுதங்கள் ஏந்திய கரங்கள். பல திசைகளுக்கும் பரவிய கரங்கள். ஆனால் எப்படி நான்கு கைகள் என்று காட்சி சார்ந்து கேட்டோமென்றால் அது ஒரு கணத்தின் அசைவுத்தோற்றம் என்பதே பதில்.

நம் சிற்ப மரபு அசைவை கைப்பற்றுவதற்கு எடுத்துக்கொண்ட முயற்சி அபாரமானது. பத்மநாபபுரம் ராமஸாமி கோயிலின் உத்தரங்களில் ராமாயணக்கதை முழுக்க வரிசையாந சிறு சிற்பங்களாக படக்கதை போலச் செதுக்கப்பட்டிருக்கிறது. தாடகையை ராமன் அம்பெய்து கொல்கிறான். அம்புபட்ட தாடகை பின்னால் சரிந்து விழுகிறாள். தாடகையின் இடுப்புக்கு கீழே கால்கள் ஊன்றி நிற்கின்றன. இடுப்புக்குமேலே உள்ள பகுதி வரிசையாக விசிறி போல ஐந்து முறை செதுக்கப்பட்டு தாடகை சரிந்து கீழே விழும் காட்சியாக ஆக்கப்பட்டிருக்கிறது. இந்த வகையான சிலையை நாம் கோயில் சிற்பங்களில் பல இடங்களில் காணலாம்.

அதேபோல ஒருவர் வேகமாக திரும்புவதை முதுகு ஒட்டிய இருபக்கமும் முகம் கொண்ட சிலைகளாகச் செதுக்கியிருக்கிறார்கள். மேலே உள்ள சிலை தாராசுரம் கோயிலின் சுவரில் உள்ளது.இருபக்கமும் இருவர் ஆடுகிறார்கள். நடுவே நடனமாது கைகளை ஊன்றி நிற்கிறாள். அவள் வயிறு தரையோடு ஒட்டியிருக்கிறது. ஆனால் அவள் உடல் மூன்று திசைகளிலும் உள்ளது. ஏதோ விசித்திரப்பிராணி என்று பார்த்துச் செல்கிறார்கள்

உண்மை என்னவென்றால் அந்தப்பெண் ஒரே கணத்தில் கைகளை ஊன்றி தன் உடலை வலப்பக்கமிருந்து இடப்பக்கமாக சுழற்றிவிடுகிறாள். நடனத்தின் ஒரு கண நேரம் அது. அந்தக்கணத்தில் நிகழ்ந்ததைச் செதுக்க முயன்றிருக்கிறான் சிற்பி

பல நூற்றாண்டுகள் கழித்துத்தான் ஐரோப்பிய நவீன ஓவியம் அந்தச்சவாலை ஏற்றுக்கொண்டது. குறிப்பாக பாப்லோ பிக்காஸோ அசைவுகளை ஓவியமாக ஆக்க முயன்றார். அசைவின் ஒரு கணத்தை, அசைவு வழியாக காலம் கடந்துசெல்வதை, மாறுதல் நிகழும் முறையை மீண்டும் மிண்டும் வரைந்தார் அவர். அவரது படி இறங்கும் பெண் என்ற புகழ்பெற்ற கோட்டோவியத்தில் ஒரு பெண் படிகளில் இறங்கும் கணத்தை ஒன்றுடன் ஒன்று கலந்து படிந்த பல பெண் வடிவங்கள் வழியாக அவர் வரைந்து காட்டினார். நம் சிற்பிகள் செய்த அதே முறைதான்.

நம் சிற்பங்கள் பெரும்பாலும் நம்மிடம் பேசுபவை போல தெரிகின்றன. விரல் சுட்டி, விழித்து, உதடுகளில் அந்தச் சொற்களுடன் அவை நிற்கின்றன. அவை நம்மிடம் சொல்ல நிறைய விஷயங்கள் உள்ளன. சென்று மறைந்த கலையின் பொற்காலத்தைப் பற்றி அவை சொல்கின்றன. நாம் காதுகொடுப்பதே இல்லை. அவற்றை நம் போக்கில் ஏதோ புரிந்துகொண்டபடி அவற்றின் முன் நின்று மேலே சென்றுவிடுகிறோம்.

## (12) அடிமைகளும் கலையும்

அன்புள்ள ஆசிரியருக்கு,

'அருகர்களின் பாதை' – வரலாறும் ஆன்மீகமும் கலையும் இலக்கியமான வர்ணனைகளும் கலந்த உன்னதமான அனுபவத்தில் தினமும் திளைத்தேன். உங்களைப் போன்றே ஆன்மஉணர்ச்சி கொண்ட மொழிபெயர்ப்பாளர்களால் இந்தியிலும் மற்ற மொழிகளிலும் மாற்றப்பட்டு மேலும் பல கோடி பேர் அனுபவிக்க வேண்டும் என்று ஆசையாகஇருக்கிறது !

அற்புதமான கோயில் கலைகளைப் பார்க்கையில் மனதோரம் களிம்பு போல ஒருசந்தேகம் ஒட்டிக் கொள்கிறது. (நீங்கள் சொல்லும் மனிதச் சிறுமையின்அடையாளமா என்று தெரியவில்லை). தங்கள் விளக்கம் என் பார்வையை விசாலமாக்கும் என்ற நம்பிக்கையில் கேட்கிறேன்…

எகிப்து பிரமிடுகளைப் பற்றிய ஒரு காணொளியில் சில எலும்பு அகழ்வாராய்ச்சிகளைக் காட்டினார்கள் – குடும்பம் குடும்பமாக வருடக்கணக்கில் பிரமிடுக்கருகே வாழ்ந்து, டன் கணக்கில் கல் சுமந்து முதுகெலும்பு வளைந்தே போன பெயரற்ற அடிமைகளின் எலும்புகள்.

இதே போல இந்தியக் கோயில்களைக் கட்டவும் அடிமைகள் பயன்படுத்தப்பட்டார்களா? எனக்கு ராஜராஜன் மேல் இந்த விஷயத்தில் நம்பிக்கை இல்லை – ஆனால் குமாரபாலரும் ஆற்றிமாப்பியும் கட்டிய சமண ஆலயங்களிலும் இதே ரத்தக்கறை இருக்கிறதா ? அப்படி இருந்தால் அவற்றின் ஆன்மீகம் சற்று ஒளியிழக்கிறதா ?

நன்றி
மது

அன்புள்ள மது,

ஒரேவரியில் இதற்கான பதிலைச் சொல்லிவிடலாம். அடிமைகளால் உழைப்பைக் கொடுக்கமுடியும், கலையை கொடுக்க முடியாது. கலையுருவாக்கத்தையும் கட்டாய உழைப்பையும் பிரித்தறியத் தெரியாத பாமரர்களால் உருவாக்கப்பட்டது இந்த விசித்திரமான வாதம்.

சென்ற காலங்களில் கூட்டான பெரும் உழைப்பு மனிதர்களால் சாத்தியமாகியிருக்கிறது. அதன் பிரமிக்கத்தக்க தடயங்களை நாம் உலகமெங்கும் காண்கிறோம். அந்த உழைப்பு கட்டாயமாக அவர்களிடமிருந்து பிடுங்கப்பட்டிருக்க வேண்டும், வேறுவகையில் உழைப்பு அவர்களிடமிருந்து வெளிப்பட்டிருக்கவே முடியாது என்பது கார்ல் மார்க்ஸ் என்ற உடலுழைப்பை அறியாத பிரபு உருவாக்கிய பாடம்.

அடிமைமுறை என்றால் என்னவென்றே தெரியாத பழங்குடிச்சமூகங்களில்கூட மகத்தான உழைப்பின் சின்னங்கள் உள்ளன. ஏனென்றால் உழைப்பில் மனிதனின் பேரின்பம் உள்ளது. உழைப்பு மனிதனுக்கு அவனுடைய சூழலை வென்று செல்வதற்கான ஒரு வழியாக, தன்னை பிரம்மாண்டமாக ஆக்கிக்கொள்வதற்கான முறையாக இருந்திருக்கிறது. அந்த உழைப்பே அவனை இங்கே கொண்டுவந்து சேர்த்தது.

சமீபத்தில் என் ஊருக்குச் சென்றிருந்தேன். எங்களின் வடக்கத்தி வயலில் இருந்து வீட்டுக்கு ஆறு கிலோமீட்டர் தூரம் என்பதை இப்போதுதான் அறிந்தேன். முழுக்கமுழுக்க தலைச்சுமையாக அங்கே மொத்த சாணியையும் சுமந்து சென்றிருக்கிறேன். கதிர்களை சுமந்துகொண்டு வந்திருக்கிறேன். ஒருநாளில் நூறு கிலோமீட்டர்கூட சுமையுடன் நடந்திருப்பேன்! இன்று நினைத்துப்பார்க்கவே முடியவில்லை.

ஏனென்றால் அது அன்றைய வாழ்க்கை. அங்கே உடலுழைப்பை எவரும் அளவிடுவதில்லை. அது அன்றாடவாழ்க்கையின் இயல்பான பகுதியாக இருந்தது. அந்த வாழ்க்கையுடன் முழுமையாக பிணைக்கப்பட்டிருந்தோம். வேறு எதுவும் தெரிந்திருக்கவில்லை. வெற்றியும் நிறைவும் அதில்தான் இருந்தது.

திருவட்டார் கோயிலுக்கு அருகே கிராமங்களில் கல்வேலை செய்பவர்கள், சுண்ணாம்புவேலை செய்பவர்களின் தெருக்கள் இப்போதும் உள்ளன. முந்நூறு வருடம் முன்பு மார்த்தாண்ட வர்மா அக்கோயிலை விரிவாக்கிக் கட்டியபோது கொண்டுவந்து குடியேற்றப்பட்டவர்கள். அத்தகைய தெருக்களை எல்லா பெரிய கோயில்களை ஒட்டியும் காணமுடியும். அவர்கள் அடிமைகள் அல்ல. அவர்கள் அந்தவேலைகளுடன் முழுமையாக பிணைக்கப்பட்டிருந்தார்கள். அதில்தான் அவர்களின் திறமையை வளர்த்துக்கொண்டார்கள். வெற்றியையும் முழுமையையும் அடைந்தார்கள்.

இந்திய ஆலயங்களைக் கட்ட அடிமைகளைப் பயன்படுத்தினார்கள் என்பதற்கான எந்த ஆதாரத்தையும் நாம் எந்த நூலிலும் காண முடிவதில்லை. நம்முடைய மாபெரும் ஆலயங்களைக் கட்டியவர்கள் கலைஞர்களும் தனித்திறன் கொண்ட தொழிலாளர்களும்தான். அவர்கள் அந்தந்தத் தொழிலுக்கு ஏற்ப துணைச்சாதிகளாக இருந்தனர். இந்த துணைச்சாதிகள் உண்மையில் தனித்தொழிலாளர் குழுக்கள்தான். ஐரோப்பிய தொழிற்கூட்டுகளுடன் [ Labor Guilds] இவற்றை ஒப்பிடலாமென பலர் எழுதியிருக்கிறார்கள்.

இந்தக் கலைஞர்குழுக்கள் மற்றும் தொழிற்குழுக்கள் அரசாங்கத்திற்குக் கூட கட்டுப்படாதவையாக, பொதுவான சமூக ஆசாரங்களுக்கு மாறானவையாக இருந்திருக்கின்றன என்பது தொடர்ந்து பதிவுசெய்யப்பட்டுள்ளது. பக்தி இயக்கம் உச்சத்தில் இருந்த காலகட்டத்தில்கூட இவற்றில் பல தாந்த்ரீக மதங்களை பின்பற்றின.

சின்ன விஷயங்களுக்கெல்லாம் அரசர்களுடன் முரண்பட்டபோது இவர்கள் ஒட்டுமொத்தமாக நாட்டை விட்டு கிளம்பியதையும் அரசர்கள் சென்று சமாதானம்செய்து அழைத்துவந்ததையும் பல கல்வெட்டாதாரங்கல் காட்டுகின்றன

இந்தக் கலைஞர்கள் மற்றும் தொழிலாளர்கள் எந்த நிலையில் இருந்தார்கள் என்பதை நாம் நம்மிடம் புழங்கும் நாட்டார் கதைகளில் இருந்தே அறியலாம். ராஜராஜனைப்பற்றியே ஒரு கதை உண்டு. தஞ்சை பெரிய கோயிலைக் கட்டியபோது சிலைவடித்த சிற்பிக்கு அவன் வெற்றிலை மடித்துக்கொடுத்தான் என்று. அது அச்சிற்பிகளின் குழுமங்களுக்கு இருந்த அதிகாரத்தையே காட்டுகிறது.

இந்த மாபெரும் கோயில்களை நாட்கணக்கில் மாதக்கணக்கில் வேறெதையுமே அறியாமல் எதைப்பற்றியும் கவலைப்படாமல் செய்துகொண்டிருக்கக் கூடியவர்கள்தான் உருவாக்க முடியும். கலையின் இயல்பு அது. கலை அவர்களை முழுமையாக உள்ளே இழுத்துவிடும். அவர்களை அச்சமூகமே பேணியது. பெரும்பாலும் போர்களால் மட்டுமே கோயில்கட்டும் வேலை முடங்கியிருக்கிறது. அன்று கோயிலைக் கட்டிய

அந்தத் தொழிற்குழுக்களில் பல இன்றும் அப்படியே உள்ளன. நாகர்கோயில் மைலாடிக்கு வந்தால் பார்க்கலாம்.

இங்கே அடிமைமுறை இருந்தது. ஆனால் அது நிலம்சார்ந்த அடிமைமுறையாகவே இருந்தது. திறமையும் தேர்ச்சியும் தேவையான தொழில்கள் எதிலும் அடிமைமுறை இருந்தமைக்கான தடயங்கள் இல்லை. சொல்லப்போனால் அரேபியாவையும் ஐரோப்பாவையும்போல முழுமையான அடிமைமுறை இந்தியாவில் இருந்தது என்பதற்கான தடயங்கள் இதுவரை கிடைக்கவில்லை.

அத்தகைய முழுமையான அடிமைமுறையை உருவாக்கியதில் ஐரோப்பா அல்லது அரேபியாவின் தட்பவெப்பநிலைக்கும் நிலவியலுக்கும் பெரும்பங்கு உண்டு. அங்கே பனிப்பாலைகளிலும் பாலைநிலங்களிலும் மிகக்கடுமையான உழைப்பின்மூலமே உபரியை உருவாக்க முடிந்தது. ஆகவே அடிமைமுறை தேவைப்பட்டது. அடிமைமுறை இல்லாமல் அங்கே உபரி உருவாகியிருக்காது. அரசுகளும் அமைந்திருக்காது.

நிலநடுக்கோட்டுப்பகுதியான இந்தியா சாதகமான பருவநிலையும் நிலஅமைப்பும் கொண்டது. ஆகவே பழங்காலத்தில் மிகக்கடுமையான உழைப்பு எங்கும் தேவைப்படவில்லை. அதனால் உறுதியான அடிமைமுறையும் தேவைப்படவில்லை. வரலாற்றைப்பார்த்தால் இந்திய நிலப்பகுதியில் பல்லாயிரம் பழங்குடியினங்கள் சுதந்திரமாகவே வாழ்ந்திருக்கின்றன என்பதைக் காணலாம்.இந்திய சுதந்திரம் வரைக்கும்கூட அவர்கள் அப்படியே நீடித்தனர். அவர்கள் அடிமைகளாக பிடிக்கப்படவில்லை. நுகத்தில் கட்டப்படவில்லை.

அதேபோல எந்த அரசுக்கும் கட்டுப்படாத சுதந்திரமான பல்லாயிரம் மேய்ச்சல்சமூகங்கள் இந்தியப்பெருநிலத்தில் அலைந்திருந்தன. குறைவான உழைப்பிலேயே அவர்களுக்குத் தேவையான உணவையும் உடையையும் அளிக்குமளவுக்கு இந்த நிலம் வளமானதாகவும் பெரிதானதாகவும் இருந்தமையால்தான் அது சாத்தியமானது. அந்தச் சமூகங்களில் சில சட்டென்று ஒருங்கிணைந்து அரசுகளாகவும் சாம்ராஜ்ஜியங்களாகவும் ஆகியிருக்கின்றன.

பலபோகங்கள் வேளாண்மை செய்யப்பட்ட மருதநிலப்பகுதிகளிலேயே நில அடிமைகள் இருந்திருக்கிறார்கள். அது நம் வரலாற்றின் ஒரு பக்கம் மட்டுமே.

அதை மட்டுமே பார்க்க நாம் சில கோட்பாட்டாளர்களால் பழக்கப்படுத்தப்பட்டிருக்கிறோம்.

ராஜராஜனின் கோயிலைப்பார்க்கையில் அது அடிமைகளின் ரத்தம் என்ற சங்கடம் எழுகிறது என்கிறீர்கள்.வீராணம் ஏரியைப் பார்க்கையில் ஏன் எழவில்லை? இன்று ஐந்து கிலோ மீட்டர் அகலமும் பன்னிரண்டு கிலோமீட்டர் நீளமும் கொண்ட இந்த ஏரி வெட்டப்பட்டபோது இன்னும் இருமடங்கு பெரிதாக இருந்தது. முழுக்கமுழுக்க மனித உழைப்பால் வெட்டப்பட்டது இது. இரண்டரை லட்சம் மனிதர்கள் நான்கு வருடம் வேலைசெய்தார்கள். எவ்வளவு வியர்வை சிந்தப்பட்டிருக்கும். எவ்வளவு சாட்டை சுழன்றிருக்கும் – என கற்பனைசெய்துபார்க்கலாமே!

அதேபோல எவ்வளவு ஏரிகள். சோழர்களும் நாயக்கர்களும் வெட்டிய பல்லாயிரம் ஏரிகள் இல்லை என்றால் தமிழகம் வெறும் பாலைவனம். அந்த பிரம்மாண்டமான மானுட உழைப்பைத்தான் நீங்களும் நானும் அனுதினம் சோறாக உண்டுகொண்டிருக்கிறோம்.

யோசித்துப்பாருங்கள், இன்றுவரை தமிழகத்தில் உள்ள மாபெரும் ஆலயங்களைப்பற்றிப் பேசும்போது அவை கட்டாய உழைப்பாலும் அடிமைமுறையாலும் கட்டப்பட்டவை என்ற 'புரட்சிகர மனிதாபிமான' ஐயத்தை எழுப்பிய 'சிந்தனையாளர்கள்' எத்தனைபேர்! ஆனால் ஒருவர் கூட தமிழகம் முழுக்க உள்ள பல்லாயிரம் ஏரிகளை வெட்டிய நினைத்துப்பார்க்கமுடியாத பெரும் உழைப்பை அடிமைமுறையின் விளைவு என்று நிராகரிக்கவில்லை. அவற்றைப் பார்க்கையில் யாருக்குமே அடிமைகளின் ரத்தமும் எலும்பும் நினைவுக்கு வரவில்லை. கோயில்களைப் பார்க்கத்தான் மனம் சுளிக்கிறது. ஏரிகளைப்பார்க்கையில் அல்ல.

ஏனென்றால் ஏரிகள் 'தேவையானவை'. அவை மனிதனின் பசியை ஆற்றுகின்றன. கோயில்கள் 'தேவையற்றவை', அவை அரசர்களின் வெற்று ஆணவம் மற்றும் மக்களின் மூடநம்பிக்கை காரணமாக உருவானவை. இந்த எளிய வாய்பாட்டில் இருந்தே இந்த மனநிலை உருவாகிறது. உங்கள் கடிதம் அதையே காட்டுகிறது.

அதாவது நீங்கள் பொருளாதார உற்பத்தி தேவையானது ,கலையும் ஆன்மீகமும் தேவையற்றவை என நினைக்கிறீர்கள். கலைக்காகவும் ஆன்மீகத்துக்காகவும் செலவிடப்படும் உழைப்பு வீண் என நம்புகிறீர்கள்.

ஆகவே பிரச்சினை அடிமைமுறை அல்ல, நீங்கள் கொண்டிருக்கும் எளிமையான வரலாற்றுப் பார்வைதான். நேற்று வாழ்ந்த மக்களுக்கு எது தேவை எது தேவையற்றது என இன்று நீங்கள் தீர்மானிக்கிறீர்கள். இந்த முடிவைக்கொண்டு நேற்றைய வரலாற்றை உங்கள் விருப்பப்படி வரைகிறீர்கள். அந்த மக்களைப்பற்றி தீர்ப்பளிக்கிறீர்கள்.

அந்த மக்களுக்கு ஏரிகள் அளவுக்கே கோயில்களும் தேவைப்பட்டன. தங்களை தொகுத்துக்கொள்ளவும் தங்களைப்பற்றிய தன்னுணர்ச்சியை அடையவும் அவர்களுக்கு அவை உதவின. கலைமூலம் ஆன்மீகம் மூலம் ஒரு முழுமையை கற்பனை செய்துகொள்ள அவர்களுக்குக் கோயில்கள் இன்றியமையாதவையாக இருந்தன. கோயில்களைக் கட்டக்கட்ட அவை இன்னும் இன்னும் தேவைப்பட்டன. ஆகவேதான் கட்டி எழுப்பிக்கொண்டே இருந்தார்கள்.

மன்னர்கள் மட்டும் கோயில்களைக் கட்டினார்கள் என்பது பொய். ஊர்ச்சபைகள் கட்டியிருக்கின்றன. தாசிகளும், வணிகர்களும், வீரர்களும், விதவைகளும் கட்டியிருக்கிறார்கள். பிச்சைக்காரர்கள் கூட கோயில் கட்டியிருக்கிறார்கள். இக்கணம் வரை கோயில்கட்டுவது நடந்துகொண்டே இருக்கிறது. அது இந்தியச்சமூகத்தில் உள்ள ஓர் அடிப்படை உந்துதல்.

எந்த ஆட்சியாளனும் சாட்டையைச் சொடுக்கி ஒரு கோயிலைக் கட்டிவிடமுடியாது. அப்படிச் சொல்வதைப்போல வரலாறு அறியாத அசட்டுத்தனம் ஏதுமில்லை. அதைப் புரிந்துகொள்ள நேற்றை துழாவவேண்டிய தேவையும் இல்லை. நம்மைச்சுற்றியே கோயில்களை உருவாக்கி நிலைநிறுத்திய அந்த அமைப்புகளும் நம்பிக்கைகளும் வாழ்க்கையும் இப்போதும் உள்ளன.

ஒரு கோயில் நம் சமூகத்தில் உள்ள பல்வேறு தரப்பினரால் சேர்ந்து கட்டப்படுகிறது. பலவகை தொழிலாளர்கள், பல்வேறு வகை கலைத்திறமைகள். விதவிதமான ஆசாரங்கள், நம்பிக்கைகள் சேர்ந்து அதை உருவாக்குகின்றன. நம் சமூகமே ஒட்டுமொத்தமாகக் கோயிலை எழுப்புகிறது. மன்னர்கள் பலசமயம் அதற்கு ஒரு முகாந்திரமாக இருந்தார்கள், அவ்வளவுதான்.

மன்னர்களுக்குக் கோயில்கள் இரண்டு காரணங்களுக்காக தேவைப்பட்டன. ஒன்று சமூகத்தின் பல்வேறு அடுக்குகளைத் தொகுத்து ஒரு நிர்வாக

அமைப்பை உருவாக்குவதற்கு. கோயிலை மையமாகக் கொண்டு நிலநிர்வாகம், நீர்நிர்வாகம், நீதிவழங்கல், சமூக ஒப்பந்தங்கள் நிறைவேற்றல் என பல விஷயங்கள் ஒருங்கிணைக்கப்பட்டிருந்தன.

சுசீந்திரம் கோயிலைச்சுற்றி அமைக்கப்பட்டிருந்த ஊராய்மை, காராய்மை என்ற பிரம்மாண்டமான நிர்வாக அமைப்பைப்பற்றி கெ.கெ.பிள்ளை அவரது சுசீந்திரம் கோயில் என்ற நூலில் விரிவாகப் பேசுகிறார். அன்றைய நிலப்பிரபுத்துவ அமைப்பின் அடிப்படை அலகுகளில் ஒன்று கோயில்.

இரண்டாவதாக, பஞ்ச காலங்களில் கோயில், குறிப்பாக கோபுரம், கட்டுவது வழக்கமாக இருந்திருக்கிறது. கோயிலில் சேர்ந்துள்ள பஞ்சகாலத்துக்கான தானிய சேமிப்பை மக்களிடையே வினியோகம் செய்ய அந்த முறையை கையாண்டிருக்கிறார்கள்.

இந்திய நிலத்தை ஒருமுறை சுற்றிப்பாருங்கள். எங்கெங்கு பார்த்தாலும் மாபெரும் கலைக்கோயில்களைப் பார்க்கலாம். தேனீக்கள் தங்கள் இயல்பான உள்ளுணர்வால் தேன்கூட்டை கட்டுவதுபோல அவற்றைக் கட்டினார்களோ என்ற பிரமை நமக்கு ஏற்படும்.

அந்த அக உந்துதலை புரிந்துகொள்ளத்தான் நாம் வரலாற்றை வாசிக்கவேண்டும். அதற்காகவே நம்முடைய கற்பனையும் உள்ளுணர்வும் விரியவேண்டும். நம்முடைய அரைவேக்காட்டு தீர்ப்புகளை நம் முன்னோர் மீது சுமத்துவதற்காக அல்ல. அவர்களின் அந்த அகத்தேவையை வெறும் மூடநம்பிக்கை என்று சொல்லும் மூர்க்கநம்பிக்கைதான் அந்த வாதத்தில் உள்ளது.

ஆகவே பிரச்சினை அந்தக் கோட்பாட்டு மூடநம்பிக்கைதான். அந்த நம்பிக்கை எவரால் எப்படி உங்களுக்குள் செலுத்தப்பட்டதென எண்ணிப்பாருங்கள். அதன் விளைவு என்ன என்று சிந்தியுங்கள். அப்படி கலையும் ஆன்மீகமும் வீண்வேலையாக ஆகக்கூடிய ஓர் உலகம் உருவாகுமென்றால் அது எப்படி இருக்கும் என எண்ணுங்கள்.

அத்தகைய உலகை அவர்கள் உருவாக்கிக் காட்டினார்கள். ருஷ்யாவிலும் ,சீனாவிலும், கம்போடியாவிலும், கொரியாவிலும்! அடிமைகளை வைத்து உழைப்பைச்சுரண்டி ஆண்ட நிலப்பிரபுத்துவகாலத்தைக் காட்டிலும் அது ஆபத்தானதாக இருந்தது. ராஜராஜனின் கோயிலை அடிமைகளின் குருதி என பார்க்கக்

கற்றுத்தந்தவர்கள் உருவாக்கிய மனசாட்சியற்ற, கலை அற்ற, பொன்னுலகில் இன்றுவரை ஒட்டுமொத்த எகிப்திய பாரோ மன்னர்களும், ஒட்டுமொத்த கொடுங்கோலர்களும் செய்த மானுட அழிவுகளைவிட அதிகமான அழிவுகள் நிகழ்ந்தன.

ஏனென்றால் கலையும் இலக்கியமும் தத்துவமும் ஆன்மீகமும் மனிதனின் ஆன்ம வெளிப்பாடுகள். சுயநலமும் வெற்றியும்தான் மனிதனின் மேலோட்டமான அடிப்படை இயல்புகள். கலையும் இலக்கியமும் தத்துவமும் ஆன்மீகமும் அந்த அடிப்படை இயல்புக்கு எதிரான இன்னும் ஆழமான அடிப்படை இயல்பான கருணையையும் அறஉணர்வையும் வெளிக்கொணர்ந்து நிலைநாட்டுகின்றன. அதில் முழுமை ஒருபோதும் கைகூடாவிட்டாலும் அது ஒரு கனவு, ஒரு போராட்டம்.

ஆம், உலகம் இன்று வரை எத்தனை அடிமைகளை கொன்றழித்ததோ அதைவிட அதிகமானபேர் ஸ்டாலினும் மாவோவும் போல்பாட்டும் கிம்இல்சுங்கும் உருவாக்கிய கம்யூனிச அடிமை உழைப்பு முகாம்களில் அழிந்தார்கள். கலை அற்ற, ஆன்மீகம் அற்ற சமூகம் கருணையற்ற சமூகம் என்பதற்கான அப்பட்டமான வரலாற்று ஆதாரங்கள் அவை. அந்த கலை-ஆன்மீக நிராகரிப்பு நோக்குதான் தஞ்சை பெரிய கோயிலை வெறும் அடிமைச்சுரண்டலின் சின்னம் என்று முத்திரை குத்துகிறது.

**********